சத்:—அண்ணா! ஆவி நீத்த உடலென ஆயது இந்நாடு.

"நகையிழந்தனவாண்முகநாநகிற்
புகையிழந்தனமாளிகைபொங்கழற்
சிகையிழந்தன தீவிகைதேமலர்த்
தொகையிழந்தனதோகையரோதியே." —கம்பர்.

அத்தேனடைந்த சோலை திருவற்றநிலையைக் காணுதி. பறிப்பாரின்றி வெகுமலர் உதிர்ந்து, சருகென உலர்ந்து, நறுமணம் இழந்துள. காய்கனிகளும்கரிந்து வீழ்ந்துள.

பரத:—முத்திதரும் நகரேழில் முக்கியமாம் இந்நகர்க்கும் உற்றதுதான் என்னோ?

சத்:—பங்கயச்செல்வி பார்துறந்தனள்போலும்.

பரத:—வளமனையடைந்து விளைந்தவையறிவோம்.

[இருவரும் போகிறார்கள். மந்தரை விரைந்து வருகிறாள்.]

மந்த:—எங்கே என் கண்மணி பரதன்? அதோ போகிறான் அதிவேகமாய். அரசென்றால் ஆர்க்கும் ஆசைதானே. இனியவன் மன்னாதிமன்னனாகத் தடையென்ன? பெற்ற மகன் இவனிருக்க, மாற்றாள்மகன் முடிசூடுவனெனக் கேட்டதும், கைகேசியின் இன்பவெள்ளம் கரைகடந்து ஓடியது. இராமன் அரசனாயின், கோசலையின் தாசியாய் அவள் ஆவளென்றேன். பரதனும் அவந்தனாய் அலைவனென்று அடுத்துரைத்தேன். என் இனியமொழிகள் அவள் செவியினில் ஏறாது போயின. பரதனை அரசனாக்க மறுத்ததுமன்றி, என்னையும் வெறுத்தனள். எண்ணிய எண்ணம் முடிக்காதுவிட்டேனா நான்? பெண்ணாய்ப் பிறந்தாலென்ன? கூனியாய் இருந்தாலென்ன? மணப்பரிசமொழி அவட்குணர்த்தினேன். வேந்தன் வாய்மை காத்திடல் அவள் கடனெனக் காட்டினேன். திரும்பா மனமும் திரும்பியது. நான் மூட்டிய தீ நன்றாய் மூண்டது. இராமன் திருநாளும் வெறுநாளாயது. என் புத்

தியே புத்தி! யுத்தியே யுத்தி! கைகேசியின் மனதைக் கலைத்தேன்; கோசலையின் மகனைக் குலைத்தேன்; என் பகையை ஒருவகையாய் முடித்தேன். இக்கிழவி இனி அழிந்தாலும் பெரிதல்ல. இவள் பெயர் ஒருநாளும் அழியாது. என்ன அநியாயம்! வந்தபரதனை வேந்தனென்று சிறிதாவது மதித்தனரா இந்நகரமாந்தர்? அவனைக்கண்டதும் கதவடைத்தல்லவா உள்ளேசென்றனர்! சிறியனென்று என் இளஞ்சிங்கத்தை இவர்கள் இகழ்வதா? கண்ணளவாயதோ காணும் கதிரொளி? இவர்கட்கு அவன் இழைத்த தீங்குதான் என்னவோ? இராமனே ஆளவேண்டுமாம். காடுசென்றவன் இனி நாடுவந்து ஆளுவன். ஆளுவதை எல்லோரும் கண்குளிரக் காண்பார்கள்!

(நேபத்தியத்தில்) மந்தரையைமாய்த்திட இன்றுதான் வாய்த்தது. விடுவதில்லை அக்கொடியவளை.

மந்த:—இதென்ன கலகலவெனுமொலி? பரதன் வந்தது கண்டு ஊரார் எல்லோரும் கலகம் விளைக்கக் கிளம்பினர் போலும்! ஐயோ! இவர்கள் கையினிற்சிக்கினால் என்னை நமனுலகம் அனுப்புவர். அரசி கைகேசிக்கு அறிவிப்பேன். [விரைந்தோடுகிறாள்.

நகரவாசிகள்பிரவேசம்.]

வாமனன்:—பரதன் வரவும் நல்வரவே. இதுவரை வெளிவர அஞ்சிய அவ்வஞ்சகி இன்று நெஞ்சம் துணிந்து வெளிவந்தனள். அப்பாவியின் ஆவிபோக்கிடில், இப்பாரகத்தின் பாரம் தீரும்.

கேசவன்:—அப்பேதையை நோவதேன்?

வாம:—அறியாய்போலும்! உடலுறுகோணலினும் அவள் உளத்துறுகோணல் போக்குதற்கரிது. அருஞ்சுணங்கன்வாலை நிமிர்த்தவும் வசமோ? பண்டொருநாள் இராமன் வில்லுமிழ் உண்டையுண்டதனை உள்ளத்தமைத்து அவ்வுத்தமன்மீது உறுபகைதீர்க்கக் காத்திருந்தனள் இதுவரை.

மன்னவன் தன்மாமகனை மன்னனுக்க எண்ணிய தறிந்து, தான் கொண்ட பகையைக் கேகயன் பாவை யைக்கொண்டு முடித்தனள்.

கேச:—சொல்பவர் சொன்னாலும் கேட்பவர்க்கு அறிவில்லையா? இளவரசி எவ்வாறு இசைந்திருப்பள்?

சீதரன்:—காசா லேசா?

கேச:—காசாலே சாவா?

தாமோதரன்:—ஆம். ஆசைக்கு அளவேது? அகிலலோகங்களையும் கட்டியாளினும் போதாது. மண்ணாசையால் தன்மைந் தன் அரசாள ஆசைகொண்டனள்.

கேச:—மன்னனோ?

வாம:—பெண்ணாசைகொண்டவன் என்னதான் செய்யான்? காமம் கொண்டவன் கடுநஞ்சுண்டவன். நஞ்சுண்டவனுக்கு நன்னெஞ்சுண்டா? நன்னெறியுண்டா? நலந்தானுண்டா? தன்காதலியின் காதல்முதிரக் கண்ணிழந்தான் அக்கா முகன்.

தாமோ:—ஆம். விழியிலார்க்கு ஏது விளக்கு? கண்ணிழந்து, கண் ணுட்கருமணியை இழந்து, தன்கண்ணியமும் இழந்த னன். முற்பகல்செய்தது பிற்பகல்விளைந்தது.

கேச:—என்ன! வயதுமுதிர்ந்த வேந்தனையோ, வாய்வந்தவாறு இகழ்வது? மனுமுறையகலா மன்னவன் இளமானை மகிழ் விக்கவோ இனியமகனை விலக்குவன்?

வாம:—அந்தம் நிறைந்த [1] மைந்தன் பிறந்ததும் அவன் முதிர்ந்த வயதும் திரும்பியது. அழியாயௌவனம் அடையப் பெற்றனன். அழகிய [2] மானின் விழியினிற்பட்டு இனியமகனையும் விட்டனன். மோகம் ஆட்கொள்ளவே, அவன் மதியும் சதியடைந்தது. இல்லையேல், இல்லறம் நடந்த அக்கோசலையிருக்க, மற்றும் ஆசைக்காதலியும்

---

(1) மைந்தன்—அழகுள்ளவன்; வலிமையுள்ளவன்; இராமன்.

(2) மான்—கைகேயி.

வேண்டுமோ வேந்தற்கு? பெண்டிர்பலரைக் கொண்ட வன்கதி இதுவேதான்.

தாமோ:—ஆம்! ஆம்! தந்தையிழைத்த வினைப்பயனை நன்குணர்ந்த திருக்குமரன், திருமகளை மணந்தபின்னர் நிலமகளை மணக் கமனமின்றி விலக்கினன்போலும்.

சீதர:—பெண்டிர் [1]இருவரைக்கொண்டவன்பாடே பெரும் பாடா கும். மங்கையர்பலரை மணந்தவன்முடிவைச் சொல்லவும் வேண்டுமோ?

வாம:—உண்மையென்னவோ ஊரார் அறியார். வந்த வதந்தி யோ விந்தையின் விந்தையே. வேந்தன் அவட்குத்தந்த வரம் இரண்டுண்டாம். அவ்வரங்கொண்டவள் வற்புறுத் தினளாம்.

கேச:—யாது விரும்பியோ?

வாம:—அப்பாதகியின் சூதுவிரும்பியே. சூதும்வாதும் வேதனை செய்தன. வரமொன்றினால் மைதிலி மணாளன் வனமாள் வதாம்; மற்றொன்றினால் தன்மைந்தன் அரசாள்வதாம். வேந்தனோ சொல்லறம்பிறழாது, செம்மலையிழந்து, அல் லலும் அடைந்து, ஆவியும் துறந்தனனாம். அம்புவியில் இக்கதையை நம்புவார் யாவர்?

கேச:—நம்பாமற் சென்றனனோ செம்மல் இராமன்?

வாம:—நம்பியதால் வந்த வம்புதானிது. துற்குணம் ஆறினையும் பெற்றவள் போக்கினள்; நற்குணம் ஆறினையும் பெற்ற வன் போயினன். அன்று பொன்னகரம் புலம்பியதைத் என்னென்று சொல்வது! ஆவும் அதன் கன்றும், அன் றலர்ந்தபூவும், யாவும் அழுதன. கண்செய்த பாவ மோ! மண்செய்த பாவமோ!

சீதர:—பெண்செய்த பாவமே. பெண்ணாட்டம் ஆடவிட்டால் பேராட்டம் அல்லவோ? போராட்டம் நேரிட்டால் திண் டாட்டமேதான். பெண்மதி என்றும் பேய்மதியன்றோ?

(1) இருவரைக் கொண்டவன்—உத்தான பாதன். (துருவன் தந்தை)

வாம:—ஆம்.

> "தாமகேது புவிக்கெனத் தோன்றிய
> வாம மேகலை மங்கையரால் வரும்
> காமமில்லை யெனில் கடுங்கே டெனும்
> நாம மில்லை நரகமுமில்லையே" —கம்பர்.

பேய்கொண்டாலும் கொள்ளலாம்; பெண்கொள்ளலாகாது.

தாமோ:—உண்மை. மந்தரைப்பேயை முந்திமுடிப்போம்.

கேச:—அது சரியன்று. பெண்கொலை பெரும் பாவமேயாகும்.

வாம:—அடாதுசெய்பவர் படாதுபடுவர். விடாது பாவம்; விட்டிடோம் யாமும்.

[அனைவரும் விரைந்து செல்கின்றனர்.]

களம் 2 முற்றிற்று.

## களம் 3

இடம்:—கைகேயியின் அரண்மனை.

பாத்திரங்கள்:—கைகேயி பரதன் வரவை எதிர்பார்த்திருக்கின்றனள். மந்தரை பக்கலில் நிற்கின்றனள். பரதனும் சத்துருக்கனும் பிரவேசம்.

கைகே:—[1] செல்வா! [2]நீள் செல்வம் பெற்று நீடூழி வாழ்வாய்.

பரத:—அன்னையே! எங்குளர் எமதிறைவர்? அவரது மாளிகையிற் காண்கிலனே. அன்னை கோசலையின் அந்தப்புரம் அமர்ந்துளரோ?

கைகே:—தேவர் கைதொழ வானகமெய்தினர்.

பரத:—(தரையில் விழுந்து புரண்டு) ஆ! இறைவ! இறந்தேகினீரோ? இனி எமக்குத் துணையாவார் யாவர்?

---

(1) செல்வா—அருமை மைந்தா; சென்று வா.

(2) நீள் செல்வம்—நாடாளும் செல்வம்; அழியாப் பேரின்பம்.

" அறந்தனை வேரறுத்தருளைக் கொன்றனை
சிறந்த நின்றண்ணளித்திருவைத்தேசழித்
திறந்தனை யாமெனி லிறைவ நீதியை
மறந்தனை யுனக்கிதின் மாசு மேலுண்டோ." —கம்பர்.

அப்பனே! கற்பகத்தருநிழலைக் காதலித்து ஆருயிரை நீத்தீரோ? இனியமைந்தன் இராமனைப் பிரியவுந்துணிவதா! என் அண்ணனுக்கு இம்மண்ணளிக்கவோ, விண்ணுலகேகினீர்! மன்னாதி மன்னனே! மாமகள் மணக்கோலங்கண்டு மகிழ்ந்தநீர், இப்பூமகள் மணமுங்கண்டு நெடுநாள் மகிழ எண்ணியும், உமதெண்ணம் ஈடேறாதது எத்தகைய [1] தீவினையின்பயனோ? ஐயனே! மெய்யனே! நாதனிலாது மேதினியை நலியவிடலாகுமோ.

[மூர்ச்சிக்கிறான்.]

சத்:—அண்ணா! ஆண்டாண்டுதோறும் அழுது புரண்டாலும் மாண்டார்வருவரோ? மூண்டவினை முடிந்தது; எழுந்திரும்.

பரத.—அம்மணி! மன்னவர் உமது இன்னுயிரன்றோ? உடலை விட்டுயிரகல விடலாகுமோ? அன்று, சம்பரன் போரினில் அம்பரம்சென்று அவர் ஆருயிர் காத்தீர். இன்று நீர் வையம் நின்றது வியப்பே! தாயே! ஆவிநீங்குமுன் ஐயன் எனக்கிட்ட பணி ஏதேனுமுளதோ?

கைகே:—தனையா! உன் நினைவு அவர் நெஞ்சத்திராது போயிற்று.

சத்:— [2]அக்குறைவறநின்ற நீலமேனியன் நினைவொன்றே அவர் நெஞ்சம் நிறைந்ததுபோலும்.

பரத:—தாயே! எய்திய நோய்தான் என்னே?

கைகே:— [3] மெய்யைப்பற்றிய நோயொன்று நையவருத்திப் பறித்தது அவர் ஆவியை.

---

(1) தீவினை—ஊழ்வினை; தவமுனியின் மைந்தனை சப்தபேதி யெனும் கணையினால் கொன்றவினை.

(2) மூவுலகுமளந்த நெடியவன்; எங்கும் நிறைந்தவன்.

(3) மெய்—உடல்; உண்மை; கடவுள்.

பரத:—இனி அண்ணனைக்காணாது கணமும்தரியேன். அன்னவன் பொற்கழல்தன்னில் வந்தனை வைத்தாலன்றி என் சிந்தை வெந்துயர் சிறிதும் தீர்கிலாது.

[போகயத்தனிக்கிறான்.]

கைகே:—புத்திரா! சற்று பொறு.

பரத:—ஏனம்மணி ?

கைகே:—இத்தருணம் அவன் இந்நகர் நீங்கியுளன்.

பரத:—எங்கேகினன் ? புகழ்சனகன் வளமனைக்கோ ?

கைகே:—இல்லை. வெங்கானுறைய.

பரத:—இறைவர் இருக்கவா ?

கைகே:—ஆம்.

பரத:—அரக்கரையழிக்கவா ? சுரர்க்குபகரிக்கவா ?

கைகே:—[1] ஆழியான் ஆணையாற்றவே.

பரத:—அவன் இழைத்தபிழைதான் என்னே ?

கைகே:—பிழையொன்றும் இழைத்திலன்.

பரத:—ஆயின், அக்குற்றமற்றகுரிசிலை என்பற்றியகற்றினர் ?

கைகே:—வாய்மையைக் காத்திட.

பரத:—எங்ஙனம் ?

கைகே:—என் நன்மணநாளில் மணப்பரிசமாக இம்மண்ணரசை எனக்கு வழங்கினர். மன்னவர் வாய்மையை மாசறக் காத்திடல் கடனெனக்கன்றோ ?

பரத:—ஆம், தீமையொன்றிலதேல்.

கைகே:—அக்கடன்கழிக்கத் தருணம் வாய்த்தது.

பரத:—எப்படி ?

கைகே:—மாமகனை மன்னனாக்க எண்ணி, மன்னவர் நன்னாளையுங் குறித்தனர். அஃதறிந்து, அன்று சம்பரன் போரினில் அவர் எனக்கருளிய வரம் இரண்டினையும் தரவேண்டி

---

(1) ஆழியான்—தயரதன்; ஆழிப்பிரான்; அரக்கரை யழிப்பதாய் அமரர்கட்கருளிய ஆதிதேவன் ஆணையைக் குறிக்கும்.

னேன். இருவரமும்கைவர யான் இராமனை அரணியம் போக்கி இப்பாரினை உனக்காக்கினேன். அது பொறுக் கலாமையால் அவர் ஆருயிர் நீக்கினர்.

பரத:—அந்தோ! கோமுடியே கொடுங்கோளாயிற்றே! மின்னலையபொய்யுடலை நிலையென்று பொய்யென்றபொருளொன்றைப் போற்றினையோ? [1] நன்னலங்கருதியா அண்ணலையகற்றினை?

கைகே:—மன்னவர் சொன்னலங் கருதியே.

பரத:—[2] என்னலம் இம்மண்ணினில்? மணப்பரிசமொழி உண்மையேயாயின் வரங்கொண்டு நீர் வற்புறுத்தியதேன்?

கைகே:—முதல்வனைத் தலைவனுக்க முயன்றகாலத்து, இம்முதுமொழி வெளிவந்திருப்பின், மாளாப்பழி மன்னரைச் சாருமன்றோ? அப்பழி போக்கவே இப்பழி ஏற்றேன்.

பரத:—அப்படியாயின் என்னை மன்னனுக்க வேண்டியதே போதுமே. அண்ணலையகற்றியதேன்?

கைகே:—முன்னவன் இவணிருப்பின் நீ மன்னவனுவது எங்ஙனம்? அங்ஙனம் ஆகாவிடின் மன்னவர்மாற்றம் என்னுவது?

சத்:—அதுபற்றியேபோலும் அம்மணமொழிமறைத்ததும் [3] இருவரம் விரும்பியதும்.

பரத:—என்ன விபரீத விருப்பம்! அகற்றிடவேண்டிடில் அப்பெருந்தகையை அருங்கானுய்த்ததேன்?

கைகே:—அறத்துறையில் நிலைபெற்று ஆங்கவன் ஓங்கவே.

பரத:—ஆயின், அவ்வள்ளல் இனிமீள்கிலனே?

கைகே:—வருந்தற்க; ஈரேழாண்டுகளே கானுறைந்து வரவிடுத்தேன். அச்செம்மலும் என்னுளம் அறிந்து தன்னுளம் உவந்தேசென்றனன்.

---

(1) நன்னலம்—நல்ல நலம்; நம்முடைய நலம்.

(2) என்னலம்—என்ன நலம்; என்னுடைய நலம்.

(3) இருவரம்—இரு+அரம்; இரு+வரம்.

பரத:—அந்தோ! பயந்ததாயினும் பன்மடங்கு அதிநேயமாய் வளர்த்துவந்தனையே! என்னினும் அவன் இனியனென் னப் பன்முறை பகர்ந்தவையே! அண்ணனும் உன்னையே அன்னையென எண்ணினனே! நின்நினைவுதான் என் னே? என்னை வாழ்விக்க எண்ணினையோ? தலைமகன் நலத்தையழித்து இந்நிலத்தை எனக்களிக்கவா நினைத் தனை? இளைஞ! [1] உண்மையில் இவள் எனது அன்னை யேயோ! இவள் அகத்துளது வாய்மையோ; அன்றி வஞ்சமோ? நன்மதி இவள்வயத்திருப்பின், இப்புன்மதி இயலாதிவட்கு. அப்பெருமகன்பாற்பூண்ட பேரன்பிற் கும் பொருந்தாது. இவள்தூயசிந்தையும் தீயதாய்த் திரிந்திடக்காரணமெதுவோ அறிகிலேன். பேய்கொண் டனளோ! பித்தேறினளோ!

சத்:— ஐயமேன்? ஆய்ந்தறிந்து உணர்ந்தபின்னரே இயற்றிய வினையிது.

பரத:— அந்தோ! வினையும் பழியினை நினையாதொழிந்தனையே! அவனிபனைக்கும் அழிந்தொழியினும் அது பெரிதன்று. [2] அழியா இன்பமளிக்கும் அவ்வன்பனை யகற்றுவதா? அகற்றியழிவதா? அகலகிலாத் [3] திருமகளும் [4] பணி யகலா இளையவனும் துணைவனைப்பிரிந்து உயிர்தரித்திருப் பரோ? இருவரையும் தேற்றி அவர் துயரம் மாற்றுவேன்.

[போகயத்தனிக்கிறான்.]

மந்த:—பரதா! பொறு. பிரியா இருவரும் அவனைப் பின்பற்றிப் போயினர்.

பரத:—என்ன! போயினரா? பொறுமை பொறுது இங்கிராது போயினரோ! பேரருள் அருளும் பெருந்தேவிக்குமா இக் கதி? வைதேகிக்குமா வனமுறையுங்காலம்? அந்தோ!

(1) உண்மையில்—வாஸ்தவத்தில்; உண்மையில்லாத.
(2) பேரின்பம் அளிக்கும் பெருமான்.
(3) திருமகள்—இலக்குமி; சீதை.
(4) பணி—பணிதல்; ஆதிசேடன்.

[1] அந்தமிலான் [2] உவந்தமாதுடன் [3] மன்னடிமைபாயவன் பின்படர மூவரும் ஒருங்கேசென்றனரே! [4] அறம் [5] பொருள் [6] இன்பம் மூன்றும் போயினவே. இனி ஏதுறுமோ? பேதையே! வருங்கேடுணராதுபெரும் பாவமிழைத்தனையே! இனி உய்யும்வகையும் உளதோ?

மந்த:—என்ன செய்வது? நாமொன்றெண்ண தெய்வமொன்றெண்ணியது. எல்லாம் அவன் செயல். நம்மால் என்னவாகும்? விதியை மதிவெல்லுமோ? மன்னவன் சொன்னசொல் என்றுருமோ என்று உன் அன்னையுஞ்சினள். விளைந்ததை நினைந்து வருந்துவதால் ஆவதில்லை. ஊக்கமுடைமை ஆக்கத்திற்கழகு. மனம்தேர்ந்து மாநிலமாளுவை.

பரத.—சீ! மதிகெட்டமாடே! மூடே! என்ன பிதற்றுகின்றாய்? நானு மாநிலமாளுவது?

கைகே:—மைந்தா! மன்னர்சொல் மரபினால் மன்னரசு உனக்குற்றது. பேரும், புகழும், பெருவாழ்வும், ஊரும், திருவும், தருநிழலும்பெறுவாய். இன்பம்பயக்கும் என்மொழி ஏற்பாய். மனோரதம் ஈடேற மாமுடிசூடுவாய்.

பரத:—என்ன! மனோரதமா? உன் மனோரதமா? என்னை மன்னனுக்கப் பன்னாளாய் எண்ணினையோ?

கைகே:—ஐயன் ஆணையைத் தன்தலைதாங்கிய மெய்யன்பின் பிறந்திலையோ? முன்னவன் இயற்றியவழியே [7] பின்பற்றி நடப்பது பின்னவன் தருமம் அன்றோ?

பரத:—அத்தருமத்தை யகற்றிய உனக்கும், உன்வயிற்றுதித்த எனக்கும், இனி எத்தருமத்தால் என்னபயன்?

---

(1) அ—கடவுள்; இராமன்.
(2) உ—இலக்குமி; சீதை.
(3) ம—தாஸன்; இலக்குமணன். அ+உ+ம—பிரணவம்.
(4) அறம்—தருமம்; இராமன்.
(5) பொருள்—செல்வம்; இலக்குமி.
(6) இன்பம்—சுகம்; கைங்கரியானந்தம்.
(7) பின்பற்றி நடப்பது:—இராமன் போல் தந்தை சொற்கிணங்குவது; பின்தொடர்ந்து போவது.

மந்த.—கண்ணே ! வீணே உனது அன்னையை நோவதேன் ? மன்னவன் இவளை மணக்குங்கால் மனமுவந்தறைந்த மாற்றம்துறந்து, உன்னையும் உன் மாமன்வீடுறையவிட்டு, மண்ணரசை அக்கோசலைமகனுக்கு ஆக்கமுயன்றனன். அதனையான் அறிந்ததும், மணப்பரிசமொழி இவட்குணர்த்தினேன். கணவன் கட்டுரைகாத்திடல் கடன் இவட்கெனவும் காட்டினேன். ஆங்கதுகேட்டே, குவலயம் உனக்காக்கினள் இக்குணமகள். ஐயமின்றி வையம் கைக்கொள்வாய்.

பரத.—என்னசொல்லினை ?

சத்.—அண்ணா ! இக்கொடுமனக்கூனியே இழைத்த கடுவினையிது. சலியாத நமது [1] கற்பகத்தருவை அலைத்தழித்த [2] புயற்காற்றே இக்கூற்றுவள். ஆ ! பாதகி !

[கட்கத்திற்கிரையாக்க விரைகின்றனன்.]

மந்த:—(பயந்தவளாய்) கைகேயி !

கைகே:—(தடுத்து) என்ன ?

பரத:—இப்பாவிக்குப் பரிந்திடின் உன்னுயிரில்லாது. விலகில்.
ஆஹா ! தாயெனத்தோன்றிய தீயே ! இப்பாவியும் நீயும் சதிசெய்திழைத்த சூழ்ச்சியா இது ? பாராளும் பேராசையால் பொய்யாமன்னரை மாளவிட்டு, இன்னும் நையாதிருக்கின்றனை. எம்மாசிலா மரபினை மாற்றினை ; புகழினை யழித்தனை ; பழியினைப்படைத்தனை ; குடியினைக்கெடுத்தனை. கோமுடிக்குத் தீ மூட்டிப் பூமுடிக்க நினைந்தனையா? இன்முறைநோக்காது, நல்லறம்போற்றாது, பேரருட்கொள்ளாது, பேரிடர் இழைத்தனையா ? பழியஞ்சாப் பாவி ! வஞ்சனையே வடிவுகொண்ட நய வஞ்சகி ! நஞ்சுமிழ் நாகமென்றறியாது, உன்னை நன்மலரென நம்பி, நாசமாயினர் எமதிறைவர். [1] உயிர் நிலையாயுறைந்த உத்தமனைப்பிரித்து எனது அத்தனின் ஆருயிர் உண்ட

---

(1) கற்பகத்தரு—வள்ளலாகிய தயரதன்.

(2) களம் ஒன்றில் காட்டிய புயற்காற்றை இங்குணர்க.

ஐயே! நீ பெண்ணோ? பெரும் புண்ணோ? தீயோ? மாயாப் பேயோ?

கைகே:—பாவமொருபக்கமிருக்கப் பழியினைச்சார்ற்றுவதா? தா யென்றுங்கருதாது, வாய்வந்தவாறேசுவதா? கலையெலாங்கற்றும், [2] காரணமறியாது, கருத்தழிந்தென்னை யிகழ்வதா? தேவரும், அம்மூவரும் அறிவர் என்னுளத் தூய்மை.

பரத:—யாவரும்அறிவர் உன் தீமையை. பாவமே உருவெடுத்த பாதகி! பார்த்திபன்பகையாளி! மூவுலகையும் காக்க வந்த [3] முதல்வனை, ஜனானுகூலனை, ஜானகிகாந்தனை, வேதாந்த வேத்தியனைக் கானகம் உய்த்திட, நீயும் துணிந்தனையா? நின்பாழ்மனம் பாறையோ? இரும்போ? வன்மை மிக்க வயிரமோ? மன்னுயிர்க்கெல்லாம் இன்னருள்புரியும் அண்ணலை, என் அண்ணனை, மாமணிவண்ணனை, இவ் வின்னலுக்குள்ளாக்கினையே! வெங்கதிரோன் தொல் குலத்தின் விளக்கையவித்தனையே? சூழிருள் எங்கும் சூழ்ந்து பரந்ததே! நின்சூழ்வினையின் ஆழ்துயரை அன்னையர் பொறுப்பரோ? மங்கல நாணறுந்து, அருங் கலமிழந்து, கூந்தலுமவிழ்ந்து, அவர் குழைகின்றனரே! இடுக்கண் இத்துணைமூட்டியும், இடருறாதிருக்கின்றனையா?

கைகே.—சத்தியம் அகற்று உத்தமனை உயர்விக்கவெண்ணி, இத்துணைப்பழிக்கும் ஆளாயினேன். நின்மதியை நோவதா? என்விதியை நோவதா?

சத்:—விதி வலிது. மதி சிறிது.

பரத:—நின் சதியை நோவது.

கைகே:—எத்துணையுரைத்தும் பித்தனாய் உளந்தேறாய்.

---

(1) உயிர்நிலை—உள்ளத்தில் உள்ளொளியோடுறைந்த கடவுள்.

(2) காரணம்—இமையோர் மாயையும், இறைவன் அவர்கட் களித்த வாக்கும், அந்தணர் அருந்தவமும்.

(3) முதல்வன்—முதற்கடவுள்; முதல் மகன்.

பரத:—ஆம். அவ்வுத்தமன் பித்தனே யான். அவனும் பத்தரிற் பித்தனே. பெருமானை ஏத்தாதார் பேயரே. பெரும் பேயர் பேசிடும் பேச்சை ஏற்பவன், பேயனேயாவன்.

கைகே:—மைந்தா! வேந்தர் வாய்மொழி என்னுவது? நின் வயின் வைத்த வையந்தான் என்னுவது?

பரத:—இன்னுமா அந்நினைவு? நீ கொண்ட எண்ணங் கைகூடு மென்று கனவிலும் கருதற்க. கெடுமதி கொண்ட கொடியாளே! மாயாப்பழியினை ஆக்கினையே! மாயாயோ! இன்னும் எனக்கென்தா இருக்கின்றனை? என்னை இறையாக்க எண்ணிய நின் தீவினை, இன்னுர், உன்னை இரை யாக்கவில்லையே! (கட்கத்தை யோங்கி) என் கரங்கொண்டு உன்னுயிரை யானே மாய்ப்பன். (சத்துருக்கன் தடுக்க) ஆயகன் முனியுமென்றஞ்சினேனலால் தாயெனும் பெயரேனத் தடுக்கற்பாலதோ? (கட்கத்தையெறிந்து) நின் பாழ் உதரம் தங்கிய பாதகமொழிய யான் காடேகிக் கடுந்தவம் புரிவன். தீயாரைக் காண்பதுவும் தீது; அவரோடு இணங்கியிருப்பதுவும் தீதே. சீ! நீ என் அன்னையன்று. அப்பெருந்தகையைப் பயந்த பெரியாளே சிறந்தொருதாய் எனக்கு. அவரது பணியணுகி என் நினைவினை விளக்குவன்.

[பாதனும் சத்துருக்கனும் விரைந்துசெல்ல கைகேயி மனமிடிந்துசாய்கிருள். பந்தரை அவளைத்தாங்குகிருள்.]

களம் 3 முற்றிற்று.

## களம் 4

இடம்:—மந்தரையின் மனை.

பாத்திரங்கள்:—மந்தரை பிரவேசம்.

மந்த:—அந்தரத்தவரும் என்திறம் அறியார். மந்தரையாலாயது [1]தொந்தரையொன்றேயா? விளைத்த நன்மையை இனி அனைத்துலகும் அறியும். நான் நினைத்ததென்ன! இழைத்ததென்ன! விளைந்ததென்ன! கிணறுவெட்ட பூதம் புறப்பட்டதே! பரதனோ பாரினை ஏற்கான். இனி யதாய் முகம் நோக்கான். என் ஆவியை நீக்கவா? இராமனைப் [2]பகைத்ததாய் வெறுத்தவளாயினேன். இப்பாழும் ஊரினில் இனி வாழும்வழியில்லை. இதுவரை இங்கு [3]பிழைத்ததே போதும். பிறந்த ஊர் அடையவும் தடையா? இறுமாந்திருந்த நான் இப்புரமாந்தர் கண்படில், உயிர்பிழைப்பதரிது. மனையிருப்பின் மைந்தர் என் செய்வரோ? சாந்துணையும் எனக்குச் சஞ்சலமோ? கெடுவார் கேடு நினைப்பார் என்பர். எனக்கு என்ன கேடு நேரிடுமோ?

[கரத்தினில் கட்கத்துடன் சத்துருக்கன் சினங்கொண்டு விரைந்து வந்து]

சத்:—ஆ! பழிபடைத்தபாதகி! (கூனியை பூமியில் தள்ளி) கலக்கினையா எமது அன்னையின் கலங்காமனத்தையும்? விலக்கினையா குலக்குமரனை? இப்பேரிடர் இழைக்கவோ பண்டைநாண்முதல் எம்மைபண்டி உறைந்தனை? உயிருடன் உன்னை இனி விட்டிடேன்.

[கட்கத்தை ஓங்க, பரதன் வந்து]

பரத:—இளைஞ! பெண் கொலையா?

சத்:—அண்ணா! பெண்ணாயின் என்ன?

---

1. ஒன்றல்ல பல; நன்மையும்.
(2) இராமனைப் பகைத்ததபற்றி; பகைத்த தாயாகிய கைகேயி.
(3) பிழைத்தது—உயிருடனிருந்தது; குற்றம் புரிந்தது.

மந்த:—பெண்ணென்றால் பேயும் இரங்குமே.

சத்:—பேயும் செய்யாது நீ செய்யும்வினை.

மந்த:—இரக்கமில்லையோ ?

சத்:—உயிர் துறக்கவில்லையே! பெருந்தகையே! அன்று, தடக்கை வெஞ்சிலையொன்றைவளைத்துத் தாடகையின் உரத்தைக்கீறி, அவ்வரக்கியின் ஆவி கவரவில்லையோ நம்குல முதல்? அக்கரியவளினுங் கொடியவள் இக்கூனி. இவள் கூனைக்குலைந்து, குடலைக்களைந்து, உடலைப்பிளந்து, உழலவிடாது விடுவதா ?

பாத:—சிறுவ ! பெண்கொலை புரிந்திடின் நின்முகம் நோக்குமோ அவ்வண்ணல் ?

சத்:—இப்பெரும்புண்ணை இனியும்போக்காவிடில், இவள் ஆக்கிய நோய் அதிகரிக்குமே!

மந்த:—மைந்தா ! மறந்தனையோ ?

பாத:—நீ புரிந்தகொருவினையை இப்பரதன் இறக்குமாகிலும் மறக்குமா ? நின்னைக்காண என் நெஞ்சமும் அஞ்சுமே !

மந்த:—எனக்கென்கதி ?

சத்:—கதியா ? உனக்கா ? துற்கதியே.

பாத:—மந்தரே! இந்நகர் நின்றிடில் நின்னுயிர் நீங்கிடும். விரைந்து செல். சோதரா ! அன்னை கோசலையின் அடியினையடைவோம். [போகிறான்]

சத்:—மூதேவி ! இன்னும் [1]தாமதமா ? என்ன விழிக்கின்றனை? விழிகளைப்பறித்து உழலவிடுவேன். போ ஒழிந்து. [உதைத்துப்போகிறான்.]

மந்த:—இனிநான் ஒழிந்தென்ன! இருந்தென்ன! இறந்தென்ன! ஆக்கியளித்தழிக்கும் அம்மூவரும் எனக்கு இணையாகார். கமலையும் எனக்குப் பின்னவளே தான்.

[போகிறாள்.]

களம் 4 முற்றிற்று.

---

(1) தாமதமா—தாமஸ குணமா ; காலக்கழிவா ?

# களம் 5

இடம்:—கோசலையின் அரண்மனை.

பாத்திரங்கள்:—கோசலை தன் மைந்தன் இராமன் பிரிவினை நினைந்து வருந்துகின்றனள்.

கோசலை:—"வெவ்வாயோன் வெவ்வுரை கேட்டிருநிலத்தை
வேண்டாதே விரைந்து வென்றி
மைவாய களிறொழிந்து தேரொழிந்து
மாவொழிந்து வனமே மேவி
நெய்வாய வேல்நெடுங்கண் நேரிழையு
மிளங்கோவும் பின்புபோக
எவ்வாறு நடந்தனை யெம்மிராமாவோ
எம்பெருமானென் செய்கேனே"

—குலசேகராழ்வார்.

கண்ணே! கருமணியே! குலமணியே! சிற்றன்னை சொற்கொண்டு, சிற்றமிலாது சென்றனையே! பாவியேன் பெற்றமையாலன்றோ, பெற்றபேறிழந்தனை! என்னமுதே! இன்னுயிரே! நின்மெல்லடிகள் குருதிசோர, எவ்வாறு நடந்தனையோ! பஞ்செனச்சிவக்கும் என் அஞ்சுகத்தின் கஞ்சமலரடிகள் கன்றிச்சிவந்தனவோ? இளையவன் இலக்குவனும் இடுக்கணால் துடிக்கவா! வெங்கதிரோன் வெயிலுறைப்ப, வெம்பசி நோய்கூற, வெங்கானில் வருந்தினிரோ! மூவரையும் இழந்தயான், என்றுதான் முடிவேனோ? அந்தோ! மைந்தன் வந்திலன். செய்வதொன்றறியேன். என்செய்வேன்? காகுத்தன் வாரானால் மாயும் வகையறியேன்.

"அம்மாவென் றுகந்தழைக்கு மார்வச் சொல்
கேளாதே அணிசேர் மார்வம்
என் மார்வத்திடையழுந்தத்தழுவாதே
முழுசாதே மோவாதுச்சி
கைம்மாவின் நடையன்ன மென்னடையும்
கமலம்போல் முகமும் காணாது
எம்மானை யென்மகனை யிழந்திட்ட
இழிதகையேன் இருக்கின்றேனே."

—குலசேகராழ்வார்.

கடல்வண்ணன் பின்போன நெஞ்சம் மீண்டும் வாராது, என்னையும் மறந்து, தன்னையும் மறந்ததே. ஆ! சிராமா! சுகுமாரா! சிங்காரா!

[மூர்ச்சிக்கிறாள். சுமித்திரை வருகிறாள்.]

**சுமி:**—(கோசலையின் நிலைகண்டு வருந்தி) பெற்றதவம் பலித்திருக்க இவ்வுத்தமிக்குற்ற துயர் தீருமாறில்லையே! கங்குலும் பகலும் கண்துயிலறியாள். வருந்தியழைத்தாலும் வாராத வாரா. வாராத பிள்ளையைப் பாராது தேறாள். தேறாது, சிந்தைநோய் சிறிதும் தீராள். என்செய்கேன்? (அருகிற் சென்று) அம்மணி!

**கோச:**—(மனதில் நினைத்தமைந்தன் உருவம் கண்ணினில் தோன்ற) கண்ணே! வா. மன்னா! வா. இராமா! வா.

[பரதனும் சத்துருக்கனும் வந்து வணங்கி]

**பரத:**—தாயே! தாயே!

**கோச:**—(பரதனை இராமனெனவே நினைத்து) செல்வா! [1] வந்தனையா? இலக்குவனும் வந்தனனா? எனது அன்பார்ந்த சானகியெங்கே?

**பரத:**—அம்மணி! என்னையறியீரோ?

**கோச:**—(இராமனெனவே எண்ணி) அறிவேன். நீ தான் என் கண்மணி; குணமணி; நவமணி. முடிசூட வந்தனையா? இலக்குவா! விளக்கவா.

**சத்:**—(அன்னை சுமித்திரையை விளித்து) அன்னையே! அன்னையர் மூவர். நினைவற்றனர் இவர்; வினையுற்றனர் அவர்; செயலற்றுளீர் நீவிர்; கதியற்றனம் யாமும். [2] முத்தாயவித்தை விதியா?

**சுமி:**—சோதரி! கேகயஞ்சென்ற குமரர் இவர்.

**கோச:**—அப்பா! என்னப்பன் அல்லவோ நீ?

---

(1) வந்தனையா—நமஸ்காரமா; வந்தாயா.

(2) முந்தாய—முத்தாகிய: வித்து—கிழங்கு; ஜகதாதாரப்பொருள். முத்தாய்-மூன்று தாய்மார்; அவித்தை-அஞ்ஞானம்;-விதியா கட்டளையா; வினைப்பயனா.

பரத:—அவ்வொப்பரியனுவனோ இவ்வற்பன்? எவள் அறத்தை யகற்றினளோ, மறத்தை நிறைத்தனளோ, மானிலமழித் தனளோ, அப்பாவியின் மகன் பரதனே வந்துளன்.

கோச:—(சுயநினைவடைந்து) மைந்த! நிந்தனையேன்? நிகழ்ந்ததை 1 நினையாய். மண்ணினைப்பெறும் புண்ணியன் நீ. ஆதலின், அப்பெண்ணரசி பெற்றெடுத்தாள் உன்னை. என்வயிறு வாய்த்திருப்பின், வாழ்விழந்து, வனமடைந்து, நீயும் வருந்துவாய். குவலயம்பெற்ற குமர! தாயுரைகொண்டு தரணியைத்தாங்கிடு. நீ மாமுடிசூடும் நன்னாள் என்னாள்.

பரத:—அழிந்தேன். ஒழிந்தேன். பாவியேன் என்னை என் செய்தால் தீருமோ? என்முடியினில் இடியும் விழுந் திடாதோ? அந்தோ! நொந்து வெந்து வந்தேனை இன் னும் நலியவிடலாகுமோ? (சற்று நிதானித்து) ஆம். கருணை யங்கடல் நிலைகுலைந்தகன்றது. ஆனதுபற்றியே, இவ் வாறு கருணையற்றீர். அம்மணீ! ஆணையாய்ச் சாற்று வேன். கணவனுயிர்கவர்ந்த அக்கயத்தி, தானேயிழைத்த கைதவமிது. வஞ்சனையால் வையம்பெற யான் நெஞ்சினில் நினைந்திடில், எண்ணரிய பாவமெனைச்சாரும். கற்றகலை யெலாம் பயனற்றதாகும். பெற்ற தாய்தந்தையரைப் பரிதவிக்கவிட்டவனும், கற்புடையமனைவியைக் கைவிட்ட காதகனும், பிறன்மனைநயந்த பாவியும், செய்ந்நன்றி கொன்றதீயனும், குரவர்தம் உரைகடக்கும் கொடியனும், நிருமலன் பூசையின்றி வந்துணவருந்துவானும், அடைக் கலமெனவந்தானை அளித்திடாதகற்றுவானும், அந்தணர் இல்லத்தைச் செந்தணலுக்கிட்ட அந்தகனும், நட்டாற்றிற் கைநழுவவிட்டவனும், அன்னமிட்ட வீட்டில் கன்னமிட் டவனும், தருமப்பொருளையுரிமையாக்கும் கருமதுரோகி யும், உறவுசெய்தறிந்த சொல்லை உவர்த்துழிகூறுவானும், நல்லுயிரைக்கொன்று தின்னும் புலையனும்: இவர் அனை வரும் சேரும் அருநரகினில் என்றும் உழன்று யான் அழிவேன்.

---

(1) நினையாய்—நினையாதே; நினைக்கமாட்டாய்.

**கோச:**—குறையொன்றிலாக் குலவிளக்கே! இக்கடுஞ்சபதமேன்? யார் அறியார் உன்பெருமையும், திறமையும்? என் புதல்வன், நின்னினும் நல்லனென, யான் நினைந்திலேன். மாமுடி நீ சூடி, மற்றையமூவரும் உடனிருந்து, மாநிலம் ஆளப்பெறின், பின்னுமோர்பேறும் உண்டோ எனக்கு? மன்னவர் மாற்றமும் பொய்க்காது மெய்க்குமே. இதனைக் கருதியே, என தருமைப்புதல்வன், இந்நாடிறவாமை நய வென்றேன். முன்செய்த தீவினையிருக்க, உன் அன்னை என்செய்வள்!

**பரத:**—அன்னையா அவள்? நன்னலம் பொறுப்பாவி; நன்னல மிலாநமன். ஈரமிலா நெஞ்சத்தார்க்கு ஈந்தவுபகாரம், நீர் மேல் எழுத்துக்கு நேராம்.

**கோச:**—தனையா! தாயின் [1]பழியொழி. அயனெழுதியவாறன்றி, ஏனையோர் கருதியவாறாகாது. என்னுரையேற்று மன்னுயிர் காத்திடு; மாநிலம் ஏற்றிடு.

**பரத:**—என்ன! மன்னுயிர்காக்கவா! மாநிலம் ஏற்கவா! அந்தோ! என் கன்மத்தை என்சொல்கேன்? அப்பாவியின் புதல்வனாய்ப்பிறந்த பாவமே போதுமே. கோமகன் அரசு கவரும் கொடும்பாவமும் வேண்டுமோ? அம்மணி!

> "ஊனிலா யாக்கை பேணி உயர்புகழ்க்குச் சாலநாண
> நாணிலாதிருந்தேனல்லேன் நகைபடு குரங்கினென்னும்
> பூணெலாம் பொறுத்த மேனிப்புண்ணிய மூர்த்திதன்னைக்
> காணலாம் இன்னுமென்னுங் காதலாலிருந்தேன் கண்டாய்"
>
> —கம்பர்.

குவலயமாள யான் கனவிலும் நினைபேன். அண்ணனைக் கொணர்வேன்; மன்னவனுக்குவேன்; மணிமுடி சூட்டுவேன்; அதுவரை ஊனுணவு உண்ணேன்; உறக்கமுங் கொள்ளேன்.

---

(1) பழியொழி—பழியாமலிரு; பழிவைத்திர்.

கோச:—(மார்போடு கட்டியணைத்து) கண்ணே! உன்னைக்காண என் கண்ணிணைகள் களிப்பக்களித்தேன்; என் கண்மணியையும் காணப்பெற்றவளானேன்.

[மந்திரி சுமந்திரர் பிரவேசம்.]

பரத:—மந்திரத்தலைவ! மதியின் திறமிருந்தும், வாளாவிருந்தது தகவோ? அரசர் சீறுவரேனும், அமைச்சர் உறுதியை உரைசெயாதொழிவரோ? குலகுரு வசிட்டரும் நீவிரும் இருக்கவா, இப்பேரிடர் உற்றது?

சும:—[1] பெருவெள்ளம் பெருகிவரப் பேரணை என்செயும்? பரிவுடனுரைத்த [2] குருமொழி பலவும் விழலுக்கிறைத்த நீராயினவே.

சத்:—விதியிருக்க மதி என்செயும்?

பரத:—விதியும் வினைவழியே. நல்வினை நலம் தரும்; தீவினை துன்பம் தரும். தந்தை மகற்காற்றிய உதவி நன்று நன்று. இறைவர் திருமனமும் இரும்பாயுறைந்ததே! அரசிளங் குமரனை, அரியசுகுமாரனை, அனைவர்க்கும் அன்பனை, அருங்கானுறையென அறையவும், அவர்க்கு நாவுமெழுந் ததே!

சும:—மெய்க்கயிற்றூற் பிணியுண்டு, மன்னவன் மௌனமுற்றிருந்தனன். ஆழியான் ஆணையாய் உன் அன்னையே அகற்றினள்.

பரத:—என்ன! அகற்றினளா!

சும:—ஆம்.

“ஆழிசூழுலகமெல்லாம் பரதனேயாள நீபோய்த்
தாழிருஞ்சடைகள் தாங்கித் தாங்கருந்தவமேற் கொண்டு
பூழிவெங்கான நண்ணிப் புண்ணியத்துறைகளாடி
ஏழிரண்டாண்டின் வாவென்றியம்பினன் அரசென்றாள்.”

—கம்பர்.

பரத:—நீவிர் அனைவரும் என்செய்தீர்கள்?

---

(1) கருணை வெள்ளம்.

(2) குருமொழி—குருவின் மொழி; பெரிய மொழி.

சும:—நின் தந்தையே தன் தாரமல்லளெனத் துறந்தனன் உன் தாயை.

பரத:—துறந்தும், அத்தீயவள் இன்னும் இறந்திலள்; அழிந்திலள்; ஒழிந்திலள்.

சும:—நடந்தேறியதை நினைந்து வருந்துவதாலாவதில்லை. இறைவன் இறந்து, இன்று ஈரேழு நாட்களாயின. அவ்வுத்தமனுடலைத் தயிலமாட்டி வைத்துளோம். செயக்கடவ ஈமக்கடன் செய்துமுடித்தல் உன்கடன்.

பரத:—தந்தையே துறந்ததாரத்து இழிமகனெனக்கு, ஈமக்கடன் கழிக்கும் உரிமையுமுளதோ?

சும:—கோமகன் கான்செலக்களித்திடில், அக்கடன் உனக்கிலையென இயம்பினன் இறைவன். நின்னுளப்பான்மை யாம், நன்குணர்ந்தோம். குலகுரு உனக்கு உறுவிதியுரைப்பர். அம்மறையவர் இணையடியிறைஞ்சி இதம்பெற வாராய்.

[எல்லோரும் போகிறார்கள்.]

களம். 5 முற்றிற்று.

---

## களம் 6

இடம்:—அயோத்தியில் ஒரு வீதி.

பாத்திரங்கள்:—நகரவாசிகள் பிரவேசம்.

வாமனன்:—முன்னவன் அரசைப் பின்னவனுக்காக்குவது என்ன நீதி?

தாமோதரன்:—நீதியேது? நெறியேது? தருமமே உருவென வந்த குமரனகலவே, அறமும் அவனுடனகன்றது அருளும் அத்திருமகளைத்தொடர்ந்தது. அவனியும் அழிந்தது.

கேசவன்:—விளைந்தபேரிடர் களைந்திடவே பேரறிவுடைய பெரியோர் இன்று பெருஞ்சபை கூடியுளர்.

வாம:—பெரியோராவது ! சிறியோராவது ! ஒருவரையொருவர் இனி நம்புவதேது ?

கேச:—ஏன் ?

வாம:—உறவினர் உறுதியை உலகம் அறிந்ததே.

கேச:—எப்படி ?

வாம:—அன்று [1] தனயரானவர் தந்தைதாயரை முடித்தனர். இன்று தாய்தந்தையர் மைந்தரைத் துரத்தினர். மனைவியாயவள் கணவனுயிர் கவர்ந்தனள். நட்பினர் உறவாடியவர் உட்பகைகொண்டு உதவிற்றிலர். இனி, புதல்வரும் பெற்றோரைப் போற்றுவரா? பெற்றோரும் புதல்வரைத் தேற்றுவரா? தலைவர் தம்மனைவியரை மகிழ்விப்பரா? மனைவியரும் தலைவரை மதிப்பரா? மதிப்பாரின்றி, மநுமுறை தலைகீழாயது. அன்றேல், அறுதொழிலாளரும் அச்சிறுவனை அரசனாக்க நினைப்பரா ?

கேச:—பரதனையன்றி அரசினுக்குரியவன் இங்கெவனுளன் ? பலகலையும், குலமுறையும், குறைவறக் கற்றவன்; எல்லையில் குணங்கள் வாய்க்கப் பெற்றவன்.

வாம:—என்ன ? உரியவன் அவ்விளையவனே ? உளறுதீர். ஊர்க்குருவி உயர்கருடனாகுமோ ? எங்கள் இராமனையன்றி, மற்றெவனையும் மன்னவனாய் மதியோம். அவன் பூததயாபரன்; பேதமிலாதவன்; சற்குணசம்பன்னன்; சரணாகதரக்ஷகன்.

கேச:—வேந்தர் வாழ, மாந்தர் வாழ்வர். ஆண்டுகள் பதினான்கும் கழிந்தாலன்றி, அந்நெடியவன் இந்நாடு நாடான். அதுவரை நாதனிலாது மேதினி அலமருவதா ?

வாம:—என் கருத்து அதுவன்று. அரசுரிமை என்பதின்றி, காவலனெனினும் சரியே. நகரமாந்தர் தேர்ந்தெடுத்தவன் அரசுரிக் கடமையை நடத்தக் கடவன்.

கேச:—இது மநுநெறியோ ? நின் மனநெறியோ ?

---

(1) பிரஹ்லாதனும், பரசுராமனும்.

வாம:—மறுநெறி அன்றே மாநிலமகன்றது. மறுநெறியொன்றே மதிப்பது நன்று.

கேச:—நவீன வழியால் நலம்பெற நினைவா? வையம் காக்கும் வல்லமை வாய்ந்தவர் வேந்தரே. அவர்குலம் அழிந்திடின், அவனியும் அழிந்திடும்.

சீதரன்:—பரிவுடன் அனைவரும் பரதனை வேண்டிடில்?

கேச:—தடையே இல்லை.

தாமோ:—என்ன? மங்கலநாணைத் தன்மகன் கங்கணமாக்கக், காத்துளள் அக்கைகேயி. சிந்தைமகிழ்ந்து அவள் இன்பமடைந்திடின், நிந்தை விளைந்திடும்.

கேச:—சேற்றில் முளைத்தது செந்தாமரையே. பிறப்பிடம் பற்றிச் சிறப்பினைத் துறப்பதா? பேராவின் பருமணியைப் போற்றுதார் யாவர்?

தாமோ:—தாயின் குணமே தனயனை நாடும். நான் உடன்படேன். அது என் மதமன்று.

கேச:—அனைவர் மதமும் அதுவேயாயின் உன்மதமென்னும்? சம்மதமில்லையேற் சபையினிற்பேசுக. அடங்காமதம் ஆங்கு அடங்கிடும். நேரமாயது. விரைவினிற் சபையினையடைவோம்.

[எல்லோரும் போகிறார்கள்.]

களம் 6 முற்றிற்று.

—∞◊∞—

## களம். 7

இடம்:—அயோத்திமன்னன் கோலுமண்டபம்.

பாத்திரங்கள்:—வசிட்டரும் சுமந்திரரும் மற்றும் நகரவாசிகளும் அமர்ந்துளர்.

வசிட்டர்:—அமைச்சரே! அவையோரே!

"நாமவேனரபதியுலகங்காத்தநாட்
காமவேள்கவர்கணைகலந்ததல்லது
தாமவேல்வயவர்தந்தழலங்கொல் படை
நாமநீர்வரைப்பகநலிவதில்லையே." [சூளாமணி.]

மகப்பேறின்றி, நெடுநாள் நொந்தனன் நம்வேந்தன். இயற்றிய வேள்வியால், ஈரிரண்டு மைந்தரைப் பெற்றனன்; பெற்ற பின்னரும், நொந்தனன் இனியமைந்தனால். மெய்ப்பொருளைப் போற்றி, [1] நற்பொருளை நீக்கினன். திருமகன் அரணியமடையவும், புரவலன் அமரருலகடைந்தனன். [2] இனியவன் இளையவன் அரசினுக் குரியவனன்றோ?

சும:—முற்றிலும் உரியவனே. அன்றியும், கலையெலாம் உணர்ந்தவன்; கசடறத் தெளிந்தவன்; குறையெலாம் தீர்ப்பவன்; குலமுறை காப்பவன்.

கேச:—நல்லார் ஒருவருளரேல், அவர்பொருட் டெல்லார்க்கும் பெய்யுமழை.

[பரதனும் சத்துருக்கனும் பிரவேசம்.]

எல்லோரும்:—வாழிவாழி. வேந்தே! வாழி. நீடூழி வாழி.

பரத:—அந்தோ! 'வேந்தே' என்றெனை விளிக்கவும் வாய்த்ததே. என்னகாலம்! என்னஞாலம்! மறுமுறை என்செவியினில் இவ்வெவ்வுரை விழாவண்ணம், விரைவினில் அகன்று செல்வேன்.

[வசிட்டரையணுகி அவரடிபணிய]

---

(1) நற்பொருள்:—நலந்தரும் பொருள். (இராமன்)

(2) இனியவன்:—அமுதினுமினியன்; இனி + அவன்.

வசி:—குறைதீர்ந்து நிறைந்தோங்குவீர். இவ்வாதனத்தமர்வீர். (இருவரும் அமர) இளங்கோவே! நீதியும் தருமமும் நிலை பெறவேண்டியே, ஈண்டியாம் அமர்ந்துளோம். சாகரம் தோண்டிய சகரகுமாரரும், கங்கையைக் கொணர்ந்த நும் பகீரதனும், வாய்மையைக்காத்த வள்ளல் அரிச்சந்திரனும், மற்றும் வானவர்க்குதவிய வேந்தர்பலரும் தோன்றிய தொல்குலத் துதித்தவன் நீ. தந்தை தசரதனே, சத்தியங் காத்து, உத்தமலோகம் அடைந்தனன். மைந்தன் இராமனே, மன்னனுரையேற்று, மாநகர் அகன்றனன். இருவரையிழந்தே இருநிலம் இடருறுகின்றது.

பரத:—அன்று யான் இவணிருந்திடின், அண்ணலை இந்நகரகல விட்டிரேன். அருமைத் தந்தையும் ஆருயிர் துறந்திரார்.

சும:—வேந்தனே வேண்டினன் அவனை ஓர்தினம் ஈண்டுறைந்து பின்னரே கான்செல. ஆற்றல்சால் கோசலையும் பலவாறு பன்னியிரந்தனள். வீரன் இலக்குவனும் பேரரவச்சீற்ற மொடு சீறியெழுந்தனன். அவன் சீற்றக்கனலையும் ஆற்றி யொழித்தது அக்காளமேகம்.

சத்:—[1] முன்னவன் எண்ணம் தவிர்க்க ஒண்ணுதெவர்க்கும்.

வசி:—அரசிளங்கோவே!

> " கோனிலை திரிந்திடிற் கோணிலைதிரியும்
> கோணிலைதிரிந்திடின் மாரிவறங்கூரும்
> மாரிவறங்கூரின் மன்னுயிரில்லை
> மன்னுயிரெல்லா மண்ணாள்வேந்தன்
> தன்னுயிரென்னுந் தகுதியின்றாகும். " —மணிமேகலை.

அரசன் இல்லையேல், அரியதொரு தருமமில்லை. அவனியில் அது நிலைபெற, நீ சுடர்முடி சூடுவை.

பரத:—நான்மறையாள! உமது முக்கிய நோக்கம் என்னை மன்னவனாக்கவோ?.

வசி:—இப்பேரவை யமர்ந்திடு மூதறிவுடையோர் சீரியகருத்தும் அதுவே. மூத்தோர் சொல் வார்த்தை யமிர்தம்.

(1) முன்னவன்—மூத்தோன்; ஆதியங்கடவுள்.

பரத:—மறையவர்திலக! முறை தவறிடின் மரபு முடிவுறும். முழுதும் இவ்வையகம் முறைகெட அழியவா? தலைமகற்குத் தனி முதற் பதவியும், தம்பியர்க்கு அவர் பதப்பணிவும், தகவுடைத்தென்று அறிவித்துளீர். மறைமொழிப்படி, வழிமுறை வரிசையில் குலமுதல் தனக்கும், அவ்வழிப் பிறக்கும் இறைமகனவற்கும், உற்றதிவ்வரசு. மற்றெவர்க்கும் இவ்வாக்கமிலை. பரமகுருவே! ஆங்கது மரபலவோ? முன்னவன் அரசைப் பின்னவற் காக்குதல், நன்னெறி முறையோ?

வசி:—முறையிலதொன்றை முடித்திட நினையோம். கொடையறம் கோறல் கொடிதெனக்கருதி, வளநகர் உனக்கே வழங்கினன் அரசன்.

பரத:—வேதிய! இது நீதியோ? முன்னம், அப்பேரவையில் மன்னவர் அவற்காக்கிய அரசு, மீட்கவும் படுமோ? தன்னலம் கருதியோ, என்னலம் கருதியோ, இந்நிலம் கோரியதென் அன்னையின் குற்றம்; அன்னவள் மனம்போல் மண்ணொனக்காக்கியது, மன்னவர் குற்றம்; மாமகனவனைக் கானகம் உய்த்ததோ, இவற்றினும் பெருங்குற்றமாம்; இத்தகைய குற்றங்கட்கு, உற்றதுணையாய் உதவுவது, எவற்றினும் கொடுங்குற்றமே. [1] புரோகிதர் சூழ்வினை புவனமூன்றறியும். அன்று, திருமகளை அண்ணலொடு சேர்த்தனர், அக்கோசிகமித்திரர்; இன்று நிலமகளைப் பிரித்தனர் அவர் பகைவர்.

சும:—சிறுவ! அருமறைப்பொருளை அன்றருளிய குருமொழியே, ஒருமொழியென்றறிவை. மறுமொழியுனக்கிலை. குரவரையிகழவா, கற்றதுங் கேட்டதும்?

பரத:—குலமுறை அவலமாய்ப் போகவா? ஆயும் புலவர் அறிவா இது? நீதிவழுவா நெறிமுறை என்னுவது? (தனக்குள்) போதிப்பவருளர்; சாதிப்பவரிலர்.

சும:—பரதா! வரன்முறை காத்தல் வழக்கே; வாய்மொழி காத்தலோ, வானத்துயர்ந்தது.

---

(1) அசுரகுரு சுக்கிரன்,

பரத:—[1] பேய்மொழியேற்றிடில், பெரும்பழியுற்றிடும். (தனக்குள்) இப்பாழுலகின் உலக நடையை என் சொல்கேன்? கைதவமலாது செய்தவமில்லையே! (வெளிப்படையாய்) எவ்வகையினும், அவ்விரவிகுல திலகனுக்கன்றி, மற்றெவர்க்கும் ஏற்காதிவ்வயோத்தி அரசு.

வாம:—ஆம். தானே தனக்குவமன். பிறப்பினும் சிறப்பினும், பொறுமையினும் பெருமையினும், வாய்மையினும் தூய்மையினும், நுண்ணறிவினும் தண்ணளியினும், கொடையினும் படையினும், ஒப்புயர்வற்றவன் அச்செப்பரியன் ஒருவனே.

எல்லோரும்:—உண்மை. முற்றிலும் உண்மையே.

சும:—பரதா! அப்பெருந்தகை இவணிருந்திடில், நீ புகன்றதும் ஒருவாறு பொருந்தும்.

பரத:—இந்நகர் தங்கி யான் இருத்தல்பற்றியோ, நீவிர் இருவரும் என்னையிவ்வாறு வற்புறுத்துவது? அங்ஙனமாயின், அரைக்கணமும் இங்கிரேன்.

[போகயத்தனிக்கிறான்.]

சும:—பொறு. அது சரியன்று. பாரினைக் காப்பது, உன் புகழ் குலப் பொறுப்பே. இருவரும் அகன்றபின், இங்குள இருவரில், முன்னவன் நீயே. ஆதலின், கடமைகடவாது அவனியாளுதி.

பரத:—ஆளவா? மாளவா? என்ன அநீதி! அந்நெடியவன் முடி புனைய, அக்கொடியவள் இடையூறிழைப்பது! இறைவனும் அதற்கிணங்கி, இனியமகனை இரக்கமின்றித் துறக்கவும் துணிவது! தன்னலங்கருதா முன்னவனெனிலோ, அன்னையின் ஆணையைச் சென்னியிற்றாங்கிய, இந்நகர கல்வது! மந்தரையுரைத்த மந்திரஞ்செழிக்க, இம்மந்திர முனிவரும் அத்தந்திரத்தலைவரும், இன்றிவண் நின்று சந்தியுரைப்பது! இங்ஙனம் நிகழ்த்தவோ நீவிர் இவ்வ

---

(1) பேய—கைகேயியைக்குறிக்கும்.

வைக்கண் அமர்ந்திருப்பது? இதுவோ எனக்கு உரைக்கு மிதமொழி? நினைவழிக்கும் வினைவழிக்கு என்னையா ளாக்குவதா? என்னையே நோவனோ? என்வினையினை நோவனோ? வந்த [1]விதியினை நோவனோ? தாய்செய் சதி யினை நோவனோ? இம்முதியோர் மதியினை நோவனோ? ஏதுமறியேன். என் செய்வேன்? நல்வினையில்லா வல் வினையேன்! பழியொடு பாவமெய்தி அழிவன்.

வசி:—பங்கமில் குணத்தோய்! வருந்தற்க. திருமகள் துணையும், தனது [2]மெய்வலியும், இளையவன் புணையும் துணையென இருக்க, அக்கோமகனுக் கோர்குறையும் நேர்கிலதெங் கும். கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பே. தலை மகன் [3]நிலையெண்ணி நலியவேண்டா.

பரத:—இறைநிலை அறியவும் தரமோ? பிரியவும் தரமோ?

வசி:— சான்றோர் நெறியிற் சாலநிலைத்த உத்தம! நலமுறுமென் மொழிகேட்டும், இன்னுமிவ்வாறு அலமருவையோ?

பரத:—குலமுதல் அவ்வனமதில் வருந்த, நலமிலேன் இன்னுமி ருந்தேன்.

வசி:— புண்ணிய! முன்னர், அக்கோசிகன் தன்னருள் தாங்கிய விஞ்சையும், பின்னரெய்திய பேறும், பிழைத்தவோ? மாமுனியின் வேள்வி காத்து மறையவர் பேரருள் பெற் றனன்; களித்தனன் அக்கௌமாரகேளியால்; சங்கரன் வன்சிலை வளைத்துச், சானகியைச் சீருறவே சேர்ந்தனன். பரசுடைய போர்வீரன் பெரும்பகையைப் பற்றற அறுத் தனன். அவ்வாறே, கானுறையும் மாமுனிவர் அடிபணிந் து, வானவர்கள் இடர் களைந்து, மாண்புடனே மீண்டிடு வன். வருவதெலாம் நலமெனவே நினைவாய். என் இத மொழி ஏற்பாய். தாதையின் ஆணையில் நிலைத்து நிற்பது, தனையர்தம் கடனே. ஆதலின், ஈரேழாண்டுகள் அவன்

---

(1) விதியினை—வேந்தன் ஆணையை; வினைப்பயனை.
(2) மெய்வலி—உடலின் வன்மை; சத்திய பராக்கிரமம்; சத்தியமே பராக்கிரமம்.
(3) நிலை—நிலைமை; நிற்குமிடம். (பர்துன்க)

அரணியம் உறைந்து மீளும்வரை. நீ தரணியைத் தாங்குவை.

பரத:—மறந்தும் தவிரேன் மன்னர்தம் மரபினை. பிறர் பொருள் நயக்கும் புல்லியனல்லேன். நிந்தைக்கிடமாய் என்றும் நின்றிடேன். நிதியும் வேண்டேன். பதியும் வேண்டேன். பரமநிலை யொன்றையே என்றுமே வேண்டுவன்.

சும:— நீ குவலயமேற்பதே கோமகன் கருத்து. நின் பொறுப்பினைத் துறப்பையோ ?

பரத:—சராசரம் அனைத்தையும் செவ்வனே காக்க இத்தராதலத் துதித்தவன் அப்பராபரன். அவன் பாபரகிதன்; சாப சகிதன்; சத்திய பராக்கிரமன்; உத்தமோதாரன். உடைமையைக் காப்பது, உடையவன் பொறுப்பு. அடிமைக் கேற்குமோ அச்சிறப்பு? ஒப்பாரு மிக்காரும் இலையாய சேய் இருக்க, எக்காலும் ஒப்பேன் இப்பேரரசு.

வசி:— நெறிமுறை திறம்பா நின்மலா! நீ தூயசிந்தையன்; சுயநலம் கருதாச் சுசீலன். நின் உண்மை நிலையொன்றையே உறுதியென எண்ணினை. இடருறுவார்க் கிரங்குவதினும், சிறந்ததொரு தருமமில்லது. திங்கள் கறையிருளை நீக்கக் கருதாது, உலகின் நிறையிருளை நீக்குவது நோக்குவை. அரசினை நீ ஏற்றாலன்றி, உலகுறு துயர் தீருமாறிலை.

பரத:—மும்மையு முணர்ந்த முனிபுங்கவ! எல்லாம் அறிந்தவர் நீவிர். ஏதும் அறியாதவன் யானே. அப்பதித பாவனன் பொற்பாதமன்றோ, பாவம் தீர்ப்பதும், சேமம் சேர்ப்பதும்.

“ வேண்டுதல் வேண்டாமையிலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பையில.” —திருக்குறள்.

துன்பமகன்று இன்பமமர, யான் இன்றே செல்லுவேன். சென்று, அச்செம்மலைக் கொணர்வேன். அதுவரை, யான் மெய்வருத்தம் பாரேன்; பசி நோக்கேன்; கண்துஞ்சேன்; எவ்வெவர் தீமையும் மேற்கொளேன்; செவ்வியருமையும் பாரேன்; அவமதிப்புங் கொள்ளேன். கருமமே கண்ணாயினேன்.

சும:—கதிரவன் குலவிளக்கே! அடுத்து முயன்றாலும், ஆகு நாளன்றி, எடுத்த கருமங்களாகா. அவ்வறம் துறவாப் பெருந்திறலான் தான் கொண்ட விரதம் தவிரான். புகன்ற ஆண்டுகள் பதினான்கும் கடந்தாலன்றி, இந்நகர் நாட நினையான்.

பரத:—கன்னெஞ்சனோ என் காகுத்தன்? கருணையங்கடல் அல்லனோ?

சத்:—அடியவர்க் கெளியன் அவன். திருமகளை முன்னிட்டு, ஒரு முறையுள்ளமுருகிச், சரணமென்றவன் திருவடியடைந்தக்கால், பகைவனேயாயினும், பாவியேயாயினும், அஞ்சேலென்று அருள்கொடுத்து, அவர் இடர் களைவன். அவனது அரியதொரு தருமம் அதுவே.

பரத:—ஆம். துணைவ! நன்குணர்த்தினை.

“ தனக்குவமையில்லாதான் தாள் சேர்ந்தார்க்கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது.” —திருக்குறள்.

நாம் வணங்கத்தான் இணங்குவன். அவன் இணையடியை அடையின், அடிமையைக் கைவிடான். [1] அக்கோதிலாதவன் அடிபணிந்து, தீதிலாதவனாவேன். திருவருள் பெற்றாலன்றித் திரும்பேன். அனைவரும் உடன்வர விரைவினில் பறையறைவிப்பாய். அந்தணரே! அமைச்சரே! அன்பரே! வருவீர். ஆரா அன்புடன் எம்பெருமான் இடம் அடைவோம்.

வசி:—தன்னலம் கருதார் நன்னலம் பெறுவார்.

[எல்லோரும் போகின்றார்கள்.]

களம் 7 முற்றிற்று.



(1) கோதிலாதவன்—குற்றமில்லாதவன்; குற்றமில்லாத தவத்தான்; கோதில் + ஆதவன்.

# அங்கம் 2

## களம் 1

இடம்:—சித்திரகூட பருவதம்.

பாத்திரங்கள்:—இராமபிரானும் அவர் மனைவி சானகியும்.

**இரா:**—திருமகளே! இத்திருமலையை ஓர் மதகரியென மதிக்கின்றேன்.

**சான:**—மதிப்பது இதன் பருமையைப் பற்றியோ? உருவமே நோக்கியோ?

**இரா:**—பெருமையும் கருதியே. தன்னடி அடைந்தோரை உன்னத பதவியமர்த்தி, உயர்விப்பதிது.[1]

**சான:**—ஆம். பணிபவர்க் கெளியனாய, பரமன் உயர்குணங்களே, முற்றிலும் இது பெற்றுளது.

**இரா:**—சானகி! இதன் அமைப்பைச்சற்று உற்றுநோக்குவாய். வானளாவியுருண்ட அச்சிகரங்கள் இரண்டும், உத்தம கரியின் மத்தகங்களை யொத்துள. வெண்ணிறம் அமைந்து முன்னுற வளைந்த பளிங்குகள் இரண்டும், அவ்வாரணத்தின் இருதந்தங்களை யொக்கின்றன. இவ்வரும் பெருந் தருவினின்று இழிந்துள விழுதுகளெனிலோ, இத்தாழ் வரைகளில் நிறைந்துள நீரைப் பருகாநின்ற, துங்கக் கரியின் துதிக்கையை நிகர்த்துள. அக்குகைகள் இரண்டும், கடகரியின் இரு செவிகளெனச், செப்பலாம். அன்றியும், நறுமணம் நிறைந்த இவ்வழி வரும் அருவிகள், அக்கைம்மாவின் மதநீரைப் போன்றுளவன்றோ?

**சான:**—உண்மை. எத்தகவிலும் உத்தம மத்தகஜத்தை ஒத்தேயுளது இச்சித்திரகூடம். ஒப்புயர்வற்றவர்க்கு ஏற்றதொரு பொருப்பே இது. ஆதிமூலமென்று அகங்கரைந் தலறிய ஆனைக்கு, அன்று அபயம் அருளிய அருளாளன்

---

(1) யானை தன் காலைப்பிடித்த பாகனை தலைமேல்வைத்துக்கொள்ளும்.

தனக்கும் அருள, இக்கானகம் அடைந்தனன் எனக்க ருதி, இக்கிரிராஜனும் அக்கரிராஜன் உருவெடுத்துச் சுமந் துளன் உம்மை. இதுகிரியோ, மதகரியோ என்று, இமைய வரும் இமைப்பிலர் போலும். உமது திருவிழாவிற் கேற்ப தொரு [1] பெருவிழாவும், இங்கு அமைந்துளது. அலர்ந்த மலர்கள் ஆங்கு அடர்ந்திருப்பது, களியுறும் களிற்றின் கழுத்திலணியும் கதிர்மணி யணிகளைப் பழித்துளது. விண்ணின்கண் அவ்வெண்ணிறக் கொண்டலும், கொற்ற வெண்குடையெனக் கவிந்துளது. வானவரும் உவந்தளி த்த நாண்மலர் அலங்கலென வளைந்துளது அவ்வானவில். செண்பகமலர்கள், அச்சுனையில் அசைந்தசைந்து ஆடு வது, தீபம் தருவதைப் போன்றுளது. அன்றியும், இங்கு நடைபெறும் விழாவினைக்கண்டு, கொண்ட இன்பம் உள் ளடங்காது, குயிலினம் இனிமையாய்க் கூவவும், வண்டி னம் மலர்களின் தேனையுண்டு பாடவும், மயிலினம் அழகிய தோகைகளை விரித்தாடவும், இவ்வந்தம் அமைந்த சோலை யே நடனசாலையாயது. [2] நடுநாயகமாய் நாயகர் அமர்ந்து ளர். முனிவரும், அவர் பணிவியரும், இவ்வரியதொரு நாடகங்கண்டு, மகிழ்வினையடைகின்றனர். இவ்வுயர்வரை யின் இயற்கையழகுக்கு, அவ்வளநகரின் செயற்கையழகு அணுவளவும் இணையிலை. [3] ஆய்ந்தறிந்து அருந்துவார்க்கு அருமருந்தும் இங்குளது.

இரா:—உண்மை. ஓர்ந்துணர்ந்து ஒப்பின்றி வேந்தர் உலகாளி னும், ஆங்கு, மாந்தருளம் மகிழாது சாந்துணையும் ரங்க டமே. மண்ணவர் சுற்றமும் மன்னனைச் சாரும். அன்னை கைகேயி அன்பாய்க் காத்தனள்.

சான:—அங்ஙனம் காத்தமையால் வாய்த்ததென் பாக்கியமே.

இரா:—மாமலை! இம்மாமலையின் மாண்பு அளவிடற்கரிது.

(1) காடாளுவதற்கேற்ற முடிக்கோலமும் விழாவும்.

(2) லீலாவிபூதியில் திருமாலும் திருவும் நடிக்கின்றனர்.

(3) தேடியெடுப்பவற்கு மூலிகையும், மறையும் மருந்தும்.

புண்ணியம் புரிந்தோர் எண்ணிய கருமம், இங்கெளிதினில் முடிவுறும்.

சான:—திருமாலை வழிபடும் அத்தவமுனிவர், இத்திருமலையின் தூயநதியில் நீராடி, நீடியகாலம் தீயிடை நின்று, தவம் புரிவதென்னே? பரிபாககாலம் இன்னும் பிறக்கவில்லை போலும்.

இரா:—தூயவன்கண் [1] அன்புடையார்க்கு வைகுந்தம் தூரமன்று. தம்பரமென்று தவம்புரிவார் இன்புறவென்றும் விளம்பனமாகும். இன்பத்தின் இறுதிகாண இனிது பின் வந்தனை. [2] மாலுறும் இச்சோலைமலை உன்னை மகிழ்விக்கின்றதோ?

சான:—கண்ணுங் கருத்தும் கவருங் கருமுகிலே! காவலனும் கணவனுமாய்க் கலந்துநின்ற காரணனே!

"பதியேயெம் பரனேயெம் பரம்பரனேயெமது
பராபரனே யானந்தப் பதந்தரு மெய்ஞ்ஞான
நிதியே மெய்ச்சிறைவே மெய்ந்நிலையே மெய்யின்ப
நிருத்தமிடும் தனித்தலைமை நிபுணமணி விளக்கே
கதியேயென் கண்ணேயென் கண்மணியே யெனது
கருத்தேயென் கருத்திலுற்ற கனிவே செங்கனியே
துதியேயென் துரையேயென் தோழாவென்னுளத்தே
சுத்தநடம் புரிகின்ற சித்தசிகா மணியே."

[திருவருட்பா]

அமுதனைக்கண்ட கண்கள்மற்றொன்றினைக் காணா. ஆராவமுதமே! எனதுளத்திடை நிலைத்துள்ள உமது முடிவிலா வடிவழகொன்றே.

இரா:—என் அழகுக்கும் அழகு செய்யும், உன் வடிவழகினுக்கு உவமையுண்டோ?

சான:—[3] முழுமணிப் பூணுக்குப் பூணொன்று வேண்டுமோ?

---

(1) அன்பு—மஹாவிசுவாசம்.
(2) மாலுறும்—திருமாலுறையும்; மயக்கமுறும்.
(3) யாரே அழகுக்கழகு செய்வார்.

இரா:—என்ன இருப்பினும், [1] உன்னையன்றி, என்ன உண்டெனக்கு? நான் உன்னையன்றி யிலேன். நீ என்னையன்றி யிலை.

சான:—அதுவே போலும் என்னைத் துறந்துவந்து இங்கு இன்புற நினைத்தீ [2] ரன்று.

இரா:—மாமகளே! [3] நிலையிலா நின் மனநிலை யுணர்ந்ததும், இசைந்தேனன்றோ?

சான:—[4] சமயத்திற் கேற்பதொரு நிலை நிற்பவர் நீரே. அன்று, வரிசிலையொன்றை வளைத்து, மங்கையொருத்தியை மணந்தீர். மற்றுமோர் [5]வெற்றிக் கொடிபடையவே, [6] வானவில் நோக்கி ஆவலுடன் வந்துளீர்.

இரா:—விடுகணையும், தொடுமனையும், புகலுரையும், ஒன்றென்று சகமறியும்.

சான:—ஒன்றேயாகில் இக்குன்றம் உறையீர்.

இரா:—உய்யும்வகை நினைந்துயர்ந்தேன். உயர்நலம் அடையவே, இவ்வரையினில் [7] நின்றேன்.

சான:—நின்றநிலையுணர்ந்து [8] அருந்துணையுமாவேன்.

[புன்னகையுடன் இலக்குமணன் அணுகிவர]

இரா:—இலக்குமணா! நின் நகைமுகம் இன்று காணப்பெற்றது வியப்பே.

இல—அண்ணு! சேய்மையிற் காணவே [9] செஞ்சடைப் பிரானெனப் பொலிவுற்றனை.

---

(1) உன்னை—ஞானசக்தி சுருணுருபத்தைக் குறிக்கும்.
(2) அன்று—அக்காலம்; அல்ல.
(3) நிலையிலா—மங்கையர்மனம் நிலையிலாமை; செல்வம் நிலையாமை யுணர்க.
(4) சமயம்—காலம்; மதம்.
(5) வெற்றிக்கோடி—ஜயஸ்ரீ.
(6) வானவில்-இந்திரதனுசு; வான் + நவில்; பாற்கடலடைந்துமுறையிட வானவர்க்களித்த வாக்கு.
(7) நிலைத்திருக்க வேண்டிடில் படுத்துச் சுகித்திருப்பர். வேறு இடம் (தண்டகாரணியம்) நாடியதை நின்ற நிலை குறிக்கும்.
(8). அடியவரைக் காக்கவும், கொடியவரை மாய்க்கவும், தேவியின் துணையின்றி, இயலாது இறைவனுக்கு.
(9) அரக்கரை யழிக்க வந்ததை அறிவித்ததாகும்.

இரா:—அவ்வாறு ஐயுறக்காரணமெதுவோ?

இல:—அடர்ந்த வெண்ணிறக் கொண்டல் எங்கும் படரவே, இக் கரிகிரியும் அவ்வெள்ளியங் கிரியென, விளங்கலுற்றது. வெண்ணீறணிந்த கண்ணுதற் கடவுளெனக் கண்டேன்.

சான:—கருமுகிலே! நும் கரியதிருமேனி காணநாணியோ, கொடையினிற் கோதிலாவள்ளலென வெட்கியோ, நீருண்ட மேகமும் தன்னிறம் மாறி வெண்ணிறமாயது.

இரா:—இளைஞ! நீ நகையுற்றதும் இதுபற்றியோ?

இல:—அருளே வடிவுகொண்ட அருட்பெருந்தேவியர் அருகினில் இருக்க, முப்புரம் எரித்த சிவபெருமானுக்கு, எப்புரமெரிக்க ஒண்ணுமென, எண்ணினேன்.

இரா:—அப்பொன்னிறப் பெருமானென்று என்னை நீ எண்ணினும், இப்பொன்னார் மேனியளை, மரகதமணி மலைமகள் உமையென நினைந்ததும், எங்ஙனம்?

இல:—அரவிந்தநயன! அன்னையின் பொன்னடிக் கமலமலர் ஒன்றையே கண்டு யான் பணிவது. அண்மையில் வந்ததும், என்னையாள் அண்ணலும், உன்னைநேர் அன்னையும், கண்டு யான் உவகை கொண்டனன்.

இரா:—துணைவ! [1] கருணையுள்ளவரை, பகைத்தவர் எவரையும் அடர்த்திடவொண்ணாது. செய்மையிற் கண்டதும் கொண்ட நின்ஐயம் கேட்டு, அகமகிழ்ந்தேன். தன்னை உருவிலியாக்கிய கண்ணுதலென்று என்னையஞ்சி அம்மாரன் இப்பக்கமே சாரான். தபோதனர் அருந்தவமும் இடையூறின்றி நிறைவேறும்.

சான:—ஒருருவரொருவரை ஈருருவரென்பர் இருநிலத்தோர்.

இல:—மதிவதன மதன! நின் [2] திருவுருவைக் காணின் [3] அத்தீ

---

(1) கருணையுள்ளவரை—கருணைக்குணமிருக்கும் வரை; கருணைரூ(பிணி சீதை) உடனுறையும் வரை.

(2) திரு—பேரழகு; சீதை.

(3) த்வீயையாள்பவன்—காமத்தீயைக் கிளப்பும் மன்மதன்; த்வீபத்தை (இலங்கையை) ஆள்பவன் இராவணன்.

விளையாள்பவன் [1] உருமாறிவந்து திகைக்கச் செய்வனோ?

இரா:—வானவரைவென்ற [2] வீரனேயாயினும் என்னையும்வெல்ல வல்லனோ அவ்வில்வலவன்?

இல:—வெல்லரிய வீரராதலின், [3] அப்புல்லியன் எதிர்பட நில்லான். ஆயினும், [4] வலியிலா முனிவர், என்செய வல்லர்? அவரது தவமும், அவமாகுமோ?

இரா:—சொல்லொன்றால் அவர் எவரையும் சுடவல்லர். அன்றியும், [5] போதகமனையவன் பொன்னுழித் துணையிருக்கத், தீதுகளிழைக்கத் துணிந்தவன் அணுகினும், என்னும்? பஞ்சபாணன் அம்புக்கு அவர் எஞ்ஞான்றும் அஞ்சார்

இல:—இருளகல விளங்கும் அறிவரிய பொருளே! குன்றத்திட்ட [6] விளக்கின் ஒளியிருக்க, இருளுக்கிடமில்லை.

இரா:—என்னே மானிடர் மடமை! நலம் அளிப்பது நாடெனவும், கேடிழைப்பது காடெனவும், கருதுகின்றனரே!

இல:—குலமுதலே! இல்வாழ்க்கை நல்வாழ்க்கையலவோ? நாடு தங்கி நலம்பெற வழியிலையோ?

சான:—காவல! காடுறைவோர் கூடடையாரோ?

இரா:—இருவர் குறிப்பையும் இன்றுணர்ந்தேன். பின்படர உங்கட்கு இடம் தந்து இணங்கியது, என்பிழையே. என் பொருட்டு, எவரும் இடருற, இடம் கொடேன். காயும் வனத்திடை இப்பூங்கொடி வாடிவதங்கிடும். பாயும் புலி காணின் இம்படமான் அஞ்சும். இளைஞ! இம்மெல்லியலை உடன்கொண்டு நாடேகுவை. அன்னையரும் அழிவேந்தனும் ஆறுதலடைவர் உங்கள் ஆதரவால.

---

(1) உருமாறி—மதனன் பெண்ணுடையுடுத்து; இராவணன் சந்நியாசி வேஷம் தரித்து.
(2) வீரன்—மன்மதனையும் இராவணனையும் சுட்டும்.
(3) மன்மதனையும் இராவணனையும் குறிக்கும்; மதனன் உருவிலான்; இராவணன் அறிவிலான்.
(4) மெய்வலியும் மனவலியும்
(5) போதகமனையவன்—யானையை யொத்தவன்; இதயகமலத்தை மனையாயுடையவன்; பாற்கடலிற் பள்ளிகொண்டவன்.
(6) விளக்கு—ஆதியஞ்சோதி; வேதாந்த தீபம்.

**சாண:**—[1] அந்தரங்கப் பெருமானே! மண்ணிற்புலியை [2] மதிமான் அஞ்சுமோ? மனையை நீக்கிப், [3] பெருமானை நோக்கிய, என்னையும் நீக்கவா? தாங்கொணுத் துயருக்காக்கவா? சோகமகல யான் [4] அசோகத்தரு நிழலே நிற்பன். நும் பிரிவெனும் நிரயத்திற்காளாக்க என் பிழைத்தேன்? இறையும் அகலகிலா, என்னையகற்றி என்பெறநினைத்தீர்? எத்துயர் வரினும் பொறுப்பேன். நும்பிரிவெனும் துயருறின் மரிப்பேன். பெண்கொடியை வதைசெய்தார் பெருமையும் என்னும்? நீரிலாது நானில்லை.

**இல:**—சரணியனே! சரணம் புகுந்தாரை உன் போலாக்கும் [5] அரணியனே!

> "உமதடிக ளடைகின்றே னென்றொருகா லுரைத்தவரை
> அமையுமினி யென்பவர்போ லஞ்சலெனக் கரம்வைத்துத்
> தமதனைத்து மவர்தமக்கும் வழங்கியுந்தான் மிகவிளங்கும்
> அமைவுடைய வருளாள ரடியிணையை யடைந்தேனே."
>
> —வேதாந்ததேசிகன்

[6] அங்கயலைக்கும் வினையால் அலமரவோ, உனக்கும் [7] அங்கமலைக்கும் அடிமைப்பட்டேன் உங்கட்குற்ற பணியியற்றி யான் பிறந்த பேறடைந்திடவே, பின்படர்ந்தேன். இச்சுவைதவிர யான்போய், இந்திரலோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன். நிரந்தரம் ஆட்பட்டு யான் நின்றிடின், அப்புரந்தரனும் எனக்கிணையாகான். விண்ணுளாரினும் சீரியனாவேன். நற்றாயினும் இனியாய்! சற்றாயினும், இனியாய் நாடு நாடாவகை, நாடுவாய். நின்

---

(1) அந்தரங்கம்—ஏகாந்தம்; அம்+தரங்கம்—அழகிய பாற்கடல்; அந்த+ரங்கம்—ஸ்ரீரங்கம்.

(2) மதிமான்—புத்திமான்; சந்திரனில் உள்ளமான்; இராமசந்திரனுடைய மான் (சீதை)

(3) பெருமானை—கடவுளை; மாயமானை.

(4) அசோகத்தரு—சோகம் தீர்க்கும் தரு (கடவுள்); இலங்கையிலுள்ள அசோகவனத்தின் தரு.

(5) அரணியன்—ரக்ஷகன்; காட்டிலுள்ளவன்.

(6) & (7) அங்கம்+அலைக்கும்; அம்+கமலைக்கும்.

அருள் உண்டெனில், உய்வோம். இன்றெனில்; இருவரு மில்லை. திருமாலே! மானுறும் இத்திருமகள் நினைவினை நினைவாய்.

சான:—அருளாளா! ஆளாகி, யஞ்சாதிருக்க, அருள் புரிவாய். களைகண்[1] மற்றிலார் இடுக்கண் களைவாய்.

இரா:—இருவர் துணையுமிருக்க, என்[2] அருந்தவப் பலிக்கும்.

களம் 1 முற்றிற்று.

—∞✠∞—

## களம் 2

இடம்:—சிருங்கிபேரபுரத்தைச் சார்ந்த ஒருகாடு.

பாத்திரங்கள்:—வேடர்கள் பிரவேசம்.

கோங்கன்:—அண்ணே! என்ன அநியாயம்? நம்பொ ராமசாமியெ தொரத்திட்டாங்களே படுபாவிங்கொ! நல்லா இருப் பாங்களா?

சப்பாணி:—பண்ணபாவம் சும்மா உடுமா? பின்னேயேவந்து கொல்லாதா? துள்ளும் துள்ளல் எத்தினி நாளைக்கு? பாவம்! சாமீன்ன சாமியா! நாம்பொதான் பாத்தோமே! கமலக்கண்ணும், பவளவாயும், மாணிக்கமேனியும், அய கன் அயகே அயகு.

---

(1) இருவரையும் முனிவரையும் குறிக்கும். . இலக்குமியின் புருஷகாரத்துவம் விளக்கப்பட்டது.

(2) துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனம்.

கோங்:—ஆமாம். பாக்கப்பதிஞயிரம் கண் ஒணும். என்ன காந்தி என்ன சாந்தி! என்ன மனம்! என்ன குணம்! என்ன நயம்! என்ன விநயம்! என்ன அன்பு! என்ன அம்பு நகரத்திலே மெச்சாதவங்கொ இல்லையாம்.

சேங்கன்:—வந்தவெனெ அதுதான். அல்லாரும் ஒத்தனெமெச்சிக்கிட்டா, பாவிங்கொ பொறுக்கமாட்டாங்கொ. அயல் வாய்ந்தா, அஞ்சுபட்டினி. பொறுமெயேப் பிடிச்சா, சுளுவிலெ உடாது.

கோங்:—ஆமாம். ராசாவுக்கு பெரியமவன் ராமசாமி. பெரிய ராணி வவுத்திலே வந்தாரு. பட்டம் கட்டணுான்னு ராசா சொன்னாராம். மந்திரிகூட மெத்த சரீன்னு சொல்லிட்டாராம். அல்லாரும் ஒத்துக்கிட்டாங்களாம். ஆனு, பாவிங்கொ என்னமோ சூது பண்ணி, எப்படியோ ஓட்டிட்டாங்களாம்.

சப்:—சாமி ஏன் ஒத்துக்கிச்சு?

கோங்.—ஆசையில்லே; பொறுமெசாலி. ராசா போன்னுன். பேசாமே வந்திட்டாரு. அப்பன் பேச்சுக்கு மெண்டில்லே.

சப்:—ஆன்ரு, சாமிபோல இக்கணும். இருந்தா, சாமிபோலெ ஆவலாம்.

சேங்:—அல்லாம் போய் அல்லாடலாமா?

சப்:—சொத்து என்ன நித்தியம்? செத்தா கூடவருதா? தனத்தாலே பயம், பகெ; கொலெ; எத்தினியோ எளவு. சொல்லி மாளாது. மொத்தத்திலெ மெத்த தொல்லெ. என்ன ஒணும்? உண்ண ஒணவு. உடுக்கக் கந்தே. அவ்வளவுதானே? பண்ண பாவம் புண்ணியம் தான் பின்னேயேவரும்.

கோங்:—பாவிங்கொ பண்ண சூதுதான் என்ன?

சப்:—அதுதான் ஒன்னும் வெவரமா தெரியலே.

கோங்:—காதிலே விளுந்தமட்டும் சொல்லேன்.

சப்:— அல்லாம் ஒரு பொம்பளெயாலெ தான்.

குகன்:—தொணெ இல்லாத [1] தனியன்னு, கொலெ பண்ண வாரான்.

கோங்:—சாமிக்கு இங்கே தொணெயா இல்லெ? நல்லவருக்கு அல்லாரும் தொணெ பொல்லாதவருக்கு அல்லாரும் பகெ. கோடிகோடியா வேடர்கூடி கும்பிட்டிருக்கோமே!

குகன்:—ஒருவர் தொணெதான் ஏன் அவருக்கு? வில்லெ வளெச்சா வெல்ல எவனாலாவும்?

கோங்:—வில்லெடுக்கணுமா? நெனச்சாப் போதாதா? சாமியுங் கல்லே? பாவிங்கொ சாம்பலாப் பூடுவாங்கொ. சிங்கம் போலெ தம்பி பக்கத்திலெ இருக்காரே! அண்டவுடு வாரா? சீறி எயுந்தா, சத்துரு செத்தான்.

குகன்:—அந்தப் பாடுதான் ஏன் அவுங்களுக்கு? பயமவன் யமன் போலெ இங்கிருக்கேனே! ராமநாதருக்கு என்னகொறெ. நாடில்லேன்னு காடிக்குது.

கோங்:—பாவிக்கு நாடுமில்லெ; ஊடுமில்லெ; காடுமில்லெ.

குகன்:—கங்கையெ கடந்தான்னு; சாமியெ நாடுவான். [2] ஆறு கடந்து ஐயனெ நாடவா? எல்லேயிலெ கால்வைக்க ஆவுமா பாப்போம்.

> "ஆழநெடுந்திரையாறுகடந்திவர்போவாரோ
> வேழநெடும்படைகண்டுவிலங்கிடும்வில்லாளோ
> தோழமையென்றவர்சொல்லியசொல்லொருசொல்லன்றோ
> ஏழமைவேடனிறந்திலனென்றெனையேசாரோ"
>
> —கம்பர்.

அடே! படவுங்களெ இன்னிக்கி உடவாணும். தொறை யிலெ ஒரு தோணிகூட இல்லாமெ, வெலக்கிவையுங்கொ; அல்லாவேடரையும் ஒரு நொடியிலெ கூட்டிக்கிங்கொ; வழியிலெ வலெயெவிரிச்சு வையுங்கொ; படையெக்கண்டா நடுங்காமெ, எடுங்கொ வில்லும் வாளும்.

---

(1) தனியன்—தனித்திருப்பவன்; பற்றிலாக்கடவுள்.
(2) ஆறு—நதி; நல்வழி.

சப்:—ஆறிலும் சாவு; நூறிலும்சாவு. படைக்கும் பயமில்லெ; பாவிக்கும் பயமில்லெ. சாமிக்காக, சாவுக்கும் துணிஞ்சோம். வேடருங்கொ போடறபோடுலெ, பாவிங்கொ காடுவுட்டு ஓடணும்.

[வேடர்கள் வேகமாகப் போகிறார்கள்.]

குகன்:—(அடங்காச் சினங்கொண்டு) என்தொணையவன் தவமாள, இவ்வெளியவன் புவியாளவா ?

“ அஞ்சனவண்ணனென்னுருயிர்நாயகனாளாமே
வஞ்சனையாலரசெய்தியமன்னருமவந்தாரே
செஞ்சரமென்பன தீயுமிழ்கின்றன செல்லாவோ
உஞ்சிவர்போய்விடினுய்குகனென்றெனையேசாரோ ”

—கம்பர்.

ஆண்டவன்பகை அடிமையின்பகையே. கையம்பு தணலெ கக்குது. பாயாதோ பாவிமேலெ, தப்பியும் போவானா ! நன்னிகெட்ட நாயா நான்? வரட்டும். என்ன ஆணவம் ! மண்ணா வேணும் ? பொணமா பெரட்டி, கரையிலெ உருட்டி, வெள்ளத்திலெ தள்ளறேன். பழிக்குப் பழி வாங்க இதுதான் வழி. நான் முழிச்சமுகம் நரிமுகந்தான். காட்டுவேடன் சாமிக்கும் பட்டம் தந்தான்னு நாடெல்லாம் கொண்டாடும். (அண்மையில் வரும் இருவரையும் நன்கு நோக்கி) என்ன ! போர்க்கோலமில்லெ ; மொகத்திலெ களையில்லெ; தெம்பில்லெ; கோவக்குறியில்லெ. தலெயிலெ சடைமுடி ; எடையிலெ மரவுரி; ஒடலிலெ புழுதி; கையெக்கூப்பி கும்பிட்டுக் கதறி அழுவறான். சீ! சீ ! என்னமதி எனக்கு ! சாமிபின்னெ பொறந்தவங்கொ பாவம் செய்வாங்களா ?

கோங்:—எசமான்! வேசம்போட்டு நேசம் காட்டி, மோசம் செய்வாங்கொ. வான்கோழி மயில்போலத் தோணும். நேசம் அறியாமெ நம்பினா, நாசம் தான்.

குகன்:—மோசமோ நேசமோ, பேசினா தெரியுது. சேனையைச் சேத்து வருவோம்.

[இருவரும் போகிறார்கள்.]

களம் 2 முற்றிற்று.

## களம் 3

இடம்:—கங்கை நதிக்கரை.

பாத்திரங்கள்:—சுமந்திரர் பரதன் சத்துருக்கன்.

சும:—பரத! பரம பாவனமான கங்கைமா நதியிது.

"கங்கை யென்றுல கேத்திய கடவுண்மா நதிவெண்
சங்கு சூலுளைந் தலறிய தடம்பணை தவழ்ந்து
கொங்கு யிர்த்தபூந் தடத்துலாய்க் குளம்பல நிரப்பி
யங்கண் மாநிலத் தமுதெனப் பரந்ததை யன்றே."

—நைடதம்.

இதன் இருகரையுடைய வேடுவர் தலைவன், ஒருவன் இங்குளன். அவன்கணக்கிலா [1] நாவாயன்; விற்பிடித்த வீரன்; மேருவொத்த தோளன்; இராமன்பால் எல்லையிலா அன்புள்ளவன்; தூய சிந்தையன்; தாயினும் நல்லன்; அன்னவன் துணையின்றி இந்நதிகடக்க வொண்ணாது.

பரத:—காணரிய கருமுகிலைக் கானுறையும்வேடன் கண்டுகொண்டனனோ? அப்படியாயின், அவ்வன்பன் அடியினை யான் அடைவேன்.

சத்:—தொண்டர் அடிப்பொடியாட நாம்பெறில், கங்கைநீர் குடைந்தாடும் வேட்கை என்னைம்?

[பரதன் போகயத்தனிக்கிறான். குகன் வருகிறான்.]

குகன்:—சாமி! பண்ணபாவம் போவுன்னு, சேனெசனம் இந்த நதியிலெ முயுக்குப்போட்டுப் போவும். இன்பவெள்ளம் ஒண்ணான்னா, உள்ளம் நல்லா இருக்கணும். [2] வெள்ளம் வேகமாவருது. [3] கடல்தான்கதி. பாத்துப் பிழையுங்கோ.

பரத:—புரிந்தபெரும் பாவம் தீரவே, விரைந்துயான் வந்துளேன்,

குகன்—பாவம்செய்தா பரிபவம்தான். நீங்கோ யாரோ? எந்த ஊரோ? என்ன பேரோ?

---

(1) நாவாயன்:—கப்பலுடையவன்; நாவை பெற்றவன்.

(2) & (3) கங்கை வெள்ளம் கடலைச்சேரும்; உள்ளம் தவறாயின் சேனை வெள்ளம் கடலைச்சேரும்; காதல் வெள்ளம் கருணையங்கடலைச் சேரும்.

பரத:—அயோத்திமன்னர் மைந்தர் நால்வரில், இருவர் நாங்கள். இவன் பெயர் சத்துருக்கன்.

குகன்:—மெத்த புகழ்பெத்தவன், பரதன்னு சொல்லிக்கிட்டாங்கோ.

பரத:—அப்பாதகன் யானே. பழிகாரனும் யானே.

குகன்:—அப்போ அவர் நாட்டெ பறிச்சுக்கிட்டே. காட்டிலே தொரத்திட்டே. போதாதூண்ணு இங்கேயும் தேடி வந்திட்டே. வெட்ட வெளிச்சமா தெரியுது.

பரத:—பழிக்கென்றே பிறந்த பாவியாதலின், எத்துணைப் பழிக்கினும், அத்தனையும் ஏற்குமெனக்கு.

சும:—வேடுவர் தலைவ! இவனது வேடங்கண்டும், ஐயம் கொண்டனையா?

குகன்:—[1] நல்லவேடம்! கள்ளவேடமேன்? வேடமெல்லாம் வேடனிடம் பலியாது. ஆண்டவன் பகை, அடிமையின் பகையே. தாண்ட விடுவேனா நதியெ?

பரத:—நண்பா! அன்பன் பகைவன் அல்லன்யான். உண்மையில் என் தாய்தந்தையர் இழைத்த பிழையைத் திருத்தி, அரசையவர்க் களிக்கவே வந்துளேன்.

குகன்:—கள்ளப்பேச்சு. சேனை ஏன்?

சத்:—மன்னருக்குரிய மரியாதையிது.

குகன்:—பேச்சிலெ வல்லவங்கொ பலபேர்.

சும:—மெய்யன்பு கரைந்து, கண்ணீர் ஆறாய்ப் பெருகுவது கண்டும், இவன்மீது கொண்ட ஐயம் இன்னும் தீர்ந்திலையோ?

குகன்:—கண்ணிலெ தண்ணி உட்டு தலையிலெ மண்ணெ போடுவாங்கொ. மந்திரி ஐயா! முந்தி கயவன்போன வழியே உட்டு, கொமரனெ காடுவிட்டுப் போனே. பிந்தி இவனோடெ கூடிக்கிட்டே. மன்னர் மனம்போலவே மந்திரிங்கொ நடப்பாங்கொ. குறுக்கே பேசினா இருக்கிற வேலையும்போரும் பூடும்.

[வேட்டர் பிரவேசம்.]

---

(1) நல்லவேஷம் நலம் தரும்:

சேங்:—சரிதான். பொம்பளெயா ? அடேயப்பா! அது பிடிச்சா, செந்நாய் பிடிச்சாப்போலெதான். லேசிலே உடாது. பூமியிலெ பயி, பாவம், பகெ, வலி, அல்லா்ம் அந்த பாவிங்களாலேதான். கொடியவங்கொ கெடுத்தகுடி எத்தினியோகோடி. அவுங்கொ இல்லேன்னு பாவமும் இல்லே; நரகமும் இல்லே.

முத்தன்:—சும்மா மொத்தத்திலெ திட்டாதெ. பொறப்பிச்ச சாமிக்கு புத்தி இல்லேயா ? பெண்ணே கண்ணேன்பாங்கொ. நல்ல கொணம் உள்ளவங்கொ இல்லேயா ? அவுங்கொ இல்லாமே ஊடில்லே; வாசலில்லே ; ஒலகமே இல்லே. நம்பொ சானகி அம்மாபோலெ, நல்லவங்கொ இல்லாமலா மளெ பேயுது ? அக்கிரமக்கார ஆம்பிளெங்கொ ஆயிரம்பேரு. அதெல்லாம் கணக்கில்லேயா ? ஆணே பெண்ணே அநியாயம் பண்ணு அநுபவிப்பாங்கொ. பாவி ஒருத்தியானு, பலபெண்களெ பழிக்கிறதா ? பழிச்சா, பாவம் அழிச்சூடும்.

சேங்:—சாமியெ தொரத்தின பாவி மனம் கல்லுதான். பெத்த வவுத்திலே கொள்ளிதான் வைக்கணும். கொலத்தலெவு கூணம். என்னகொலமோ ? என்ன பொறப்போ ?

கோங்:—குடியெ கெடுத்த கொடியவொ எவளோ ?

சப்:—எவளானு என்ன? எங்கிருந்தோ வந்தாளாம். பெத்த அயவாம். அவொவலேயிலெ உய்ந்தானும் கயவன். இட்டாந்தானும் பட்டணத்துக்கு. பயம், பாவுஷம் அல்லாம் தந்தானும். ஓயுங்கா ஒருமவன் பொறந்தானும். பெரியமவனுக்கு பட்டங்கட்ட பொருமெபேய் பொறுக்கலெ.

கோங்: —பொருமெ பேயா ? பெண் பேய்தான்.

சப்:—ரெண்டுபேயும் ஒன்னுதான். பொருமெபேய் சாமரெ தொரத்திச்சு. பெண்பேய் மவனுக்குப் பட்டம் வேண்டிச்சு. பாவிங்கொ பேயாட்டத்தெ கேக்கணுமா ? பாக்கணுமா ?

சேங்:—பேயாட்டியெ இட்டாந்தா, பஞ்சா பறக்குது.

சப்:—வேசம்போட்டு மோசம்செய்யும் பேய் போவாது. சாமி தான் வரணும்.

கோங்:—சாமியெயே தொரத்திச்சே !

சப்:—சாமி மனம்வச்சா ஆவாதெ போவாது.

கோங்:—(குகன் வருவது கண்டு) அடே ! எசமான் வராரு. சும்மா இருந்தா சீறுவாரு. வேலெ இல்லா வேளேயிலே ராம நாமம் பாடச்சொன்னாரே. வம்புபேச்சிலே காலங்கழிச்சா, கழுவிலே ஏத்துவாரு. பாடுவோம்.

[எல்லோரும் பாடுகிறார்கள். குகன் வருகிறான்.]

குகன்:—மெத்த சந்தோசம். பத்தியோடு பாடுங்கோ. ராமநாமம் தேனுக்குமேலெ தித்திக்கும். பண்ணபாவம் போவும். வந்தநோவு தீரும். கொலம், நலம், பொண்ணு, தனம் அல்லாம்சேரும். நம்பெ எல்லெ உள்ளே யமன் வரான்; வந்தாலும், பாசம்வீசக் கூசுவான்.

கோங்:—துணிஞ்சுவந்தா, அவன் தலெமேலெ நம்பொ காலு.

குகன்:—வல்லமெ ஒண்ணு, வல்லவன் அருள் ஒணும். நல்லா கவனியுங்கொ. சாமியெ நாடாதகாலும் காணாதகண்ணும், கேளாதகாதும் பாடாதவாயும், தொயாதகையும் வணங்காததலேயும், நெனேயாதநெஞ்சும், இருந்தும் இல்லேதான்.

கோங்:—கண்ணாலெ காணலான்னா, காணாமெ போனாரே.

குகன்:—மனசிலெ நெனச்சுக்கோ.

கோங்:—கொரங்கு மனம் கட்டுக்கு அடங்குதா? கொப்பு கொம் பாத் தாவுதே.

குகன்:—கோயில்லெ இல்லேயா? கும்பிட்டுப் பயக்கம் பண்ணு.

சேங்:—கல்லாயிக்குது. பேசுதா? வருதா? போவுதா?

குகன்:—கள்குடியா ! குடிவெறியா? கல்லிலே கடவுள் இல்லேயா? முந்தி இல்லேன்னான் இரணியன். தூணிலே சிங்கமா தோனி, கொடலெகீறி, கொண்ணாட்டாரு. சாமி இல்லாத இடமில்லே. கல்லுன்னா கண்ணவியும். கள்ளுன்னா கொலம் அழியும்.

சேங்:—அறியாமெ ஒளறினேன்; புத்தி புத்தி.

குகன்:—கள்ளெ தள்ளிறு, உள்ளம் ஒயுங்காவும். நல்லாவாழலாம். பெண்சாதி பிள்ளெங்கொ சொகப்படும்.

சேங்:—எசமான்! எனக்கு பெண்சாதி இல்லே. ஒருமவன் இக்கிறான்.

குகன்:—பெண்சாதி போயிட்டாளோ? சண்டெ போட்டாளோ?

சேங்:—செத்துப்பூட்டா. [அழுகிறான்.]

குகன்:—அயுவாதே. இன்னொரு பெண்ணெ கண்ணாலம் பண்ணிக்கொ.

சேங்:—ஐயையோ! எனக்கேன் அந்தவெனெ?

குகன்:—ஏன்?

சேங்:—நானும் அந்த அயோத்திமன்னன் ஆவவா? என் மவன் நல்லா இக்கணும். கண்ணாலமா? கல்லெடுப்பா? அந்த தொல்லெ வாணாம் வாணாம்.

குகன்:—நல்ல பெண்ணெக்கொண்டா, தொல்லெ இல்லே.

சேங்:—கைகேசியம்மாவே கண்ணுத்தான்னெனச்சாரு. உசிருக்கே ஒலெவச்சுதே! சக்களத்தி மவனெ தொரத்திச்சே!

குகன்:—வல்லவன் மனம்போலெ ஆல்லாம் ஆவும். ஆரும்அறியார் அவர் பெருமெ. மெய்யின்னா மெய்யா இருப்பாரு. பொய்யின்னா பொய்யாப் போவாரு. நம்பினா, மலெ போலெவரும் துயரம், பனிபோலெ போவும். நம்பியெ நம்புங்கொ; அன்போடு ஆடிப்பாடுங்கொ; கூடி நாடுங்கொ. நெஞ்சு உருகணும்; கண்ணீர் பெருகணும். (எல்லோரும் பாடுகிறார்கள். பரதன் சேனைவரும் சத்தம் காதில்விழ) அடே! நிறுத்துங்கொ பாட்டெ; என்னடா பெருத்த சத்தம்?

கோங்:—(சேய்மையில் சேனைவருவது கண்டு) எசமான்! கோடி கோடியா சனம் கூடிவருது; கடல்போலெ சேனெ தெறண்டு அண்டுது; தேர்மேலெ கொடிகூட பறக்குது.

குகன்:—என்ன கொடி பாரு.

கோங்:—கொடி பேரா? காட்டுவாயெக் கொடி.

குகன்:—அது அயோத்திமன்னன் கொடி. மகனெ ஓட்டினனே: அந்தகியவனு?

கோங்.—கயவனில்லே. கொமருங்கொ ரெண்டுபேரு முந்தி வாராங்கொ.

குகன்:—நல்லா கவனி.

கோங்.—ஆமாம். நம்பொ ராமசாமியும் தம்பியுந்தான்.

குகன்:—நதிதாண்டி அந்ததிக்கெ நோக்கிப்போனரு; இந்த திக்கிலே எப்படடா வருவாரு?

கோங்:—சாமிங்கொ எங்கே ஒணூன்னலும் தோனுவாங்கொ..

குகன்:—நம்பொசானகி அம்மா இருக்காங்களா?

கோங்:—அம்மாதான் இல்லே; காடெல்லாம் தேடி வாராங்கொ.

குகன்:—அம்மாளெ பிரிஞ்சா அலேச்சல்தான். கோடிசனம் ஏது அவருக்கு? (தானேகண்டு) என்ன விந்தெ! அதேஉருவம். சந்தேகமில்லே. கூடப்பொறந்த தம்பிங்கொதான்.

கோங்:—மரவுரிதந்து தொரத்தினளே! அந்தப்பாவி மவன் பரதனு?

குகன்:—ஆமாம். அவனே. சேனெயோடு காடுவரக் காரணம்? சாமியெ கொலெசெய்யவா?

கோங்:—அதுவேதான். வஞ்சனெபண்ணி வாங்கினன் அரசு; ராசா ஆனன்; போதாதா? பேராசெ பேய்பிடிச்சா, பயி, பாவம், ஒன்னும் பாராது.

குகன்:—பங்காளிங்கொ பகெ தீயாப்பத்தி தணலா எரியும்.

கோங்:—நெசம். பதினலுவருசம் போய் சாமி திரும்பிவந்தா, பட்டம்தர இஸ்டமில்லெ இவனுக்கு. எந்நாளும் தானே ஆள எண்ணிட்டான்.

குகன்:—மண்டலம் ஆண்டமன்னருங்கொ மாண்டுபோனங்களே! இந்தமண்ணூட்டெ போனங்கொ?

கோங்:—அதேது: மண்ணத்தான் போனங்கொ.

சாமி ! கும்பிட்டேன்.

வசி:—புண்ணிய ! புகழோங்கி வாழ்வாய்.

குக:—பாததூளி பட்டுது; காட்டுக்கட்டெ கடத்தேறிச்சு !

வசி:—நீ குகனல்லவா ?

குக:—ஆமாஞ் சாமி.

வசி:—உயர்குணங்களுக்கு ஏற்ற பெயரே படைத்தனை. உண்மையில் குகனே நீ. ஆனதுபற்றியே, குகையனைய நின் காயத்தின் நடுவுள் நிலைத்துளன் அந்தரகேசரி.

குக:—நெலச்சுநின்னு என்னகொறெ? [1] பாவி கண்ணிலே படாமெ போனாரு. இந்த புண்ணியன் பேர் பரதனாம்.

வசி:—ஆம். பரிப்பவனாதலின், [2] பரதனே இவன்.

குக:—பறிப்பவனா? அதுதான் சாமிசொத்தெ பறிச்சுக்கிட்டான்.

வசி:—அப்படியன்று, பரிப்பவன் என்றால், சுமப்பவன் என்று பொருள்.

குக:—ஆமாம். ஆமாம். பழி,பாவம்,அல்லாம் நல்லா சொமப்பான். விளையும் பயிர் மொளையிலெ தெரியாமலா வச்சாங்கோ பிள்ளைக்குப் பேரு ? இவன் சத்துருக்கனாம்.

வசி:—சத்துருக்களை வென்றவனாதலின், [3] சத்துருக்கனே இவன்.

குக:—வீராதி வீரனா இவன் ? இவன் வலியெ பாப்போம். ஏ ! வீரா ! எடு வில்லோ, வாளோ.

வசி:—இவ்விணையிலா வீரன், தன்னையே வென்றவன்.

குக:—(நகைத்து) சத்துருவெ வெல்லாதவன் சொத்தெ வீரன்.

வசி:—புறத்துள சத்துருக்கள் எவரையும் வெல்லுவது எளிது. அகத்துள பகைவர் ஐவரையும் வெல்லுவது அரிது. வெல்லரிய பகையை வென்ற இவ்வீரன், போராட விழையான்.

குக:—பரதா ? உன் வலி என்ன ?

---

(1) பாவி—குகனையும் பரதனையும் சுட்டும்.

(2) & (3) குணங்களுக்கேற்ற பெயர் காண்க.

வசி:—வேடுவர் இறைவ! இவ்வுத்தமன் உயர்குணங்களை யுணர்ந் தாயில்லை. பாராளுமாறு பன்முறை வேண்டியும், சீராமன் ஆளாத் அரசை அற்பமென்றகற்றினன். பற்றற்ற இப்பு னிதன், உனது நட்புக்குரிய கண்ணியன்.

குக:—முனிசாமி! நெசமாஎன்சாமி நேசமா? வேசம் போட்டு மோசமா?

சும:—பெரியோர் மனம் நொந்திடில், பொல்லாங்கு நேரிடும்.

குக:—ஐயையோ! சாமி! நான் காடாளும் கொடியன்? வித்தை யில்லே; புத்தியில்லே; யுத்தியில்லே; நல்ல சாதியில்லே; நீதியில்லே; ஏதுமில்லே எனக்கு. அறியாமெ ஒன்றி னேன். வேடர்குடிவாழணும். சபிக்காமெ பொறுக்கணும்.

வசி:—வனசரர் அரசே! பத்தியிலும் சித்தியிலும் உத்தமனே நீ. 1 ஜகன்னாதன் பதம் அடைந்தார்க்கு, ஜாதிமத பேதமிலை. வாழ்விலொரு தாழ்வுமிலை.

"குலந்தாங்கு சாதிகள்நாலிலும் கீழிழிந்து எத்தனை
நலந்தானிலாத சண்டாள சண்டாளர்களாகிலும்
வலந்தாங்கு சக்கரத்தண்ணல் மணிவண்ணற்கா ளென்றுள்
கலந்தார் அடியார்தம் மடியா ரெம்மடிகளே."

—நம்மாழ்வார்.

எல்லையில் அடிமைத் திறத்தினில் உனக்கிணையிவனே. இவனுக்குமிணை நீயே.

குக:—(பரதன் பாதம் பணிந்து) புண்ணிய புருசா! ஒன் எண்ணம் அறியாமெ, என்னென்னமோ நெனச்சேன். எத்தி னியோ பழிச்சேன். பாவம்தீர ஒன்காலெ பிடிச்சேன். மன்னிக்கணும்.

பர:—(தன் கரத்தால் குகனையெழுப்பக் குனிந்து) நண்பா!

[சற்றுமுன் "ஏ! வீரா! வடு வில்லோ வாளோ" என்ற சொற்கேட்டு வேடர்கள் விரைந்து வருகின்றனர்.]

---

(1) மதபேதமின்றித் தொட்டுத்தொழும் கடவுள் வாழுமிடமான வடநாட்டுத் திருப்பதி.

கோ:—அண்ணே ! அண்ணே ! குப்புறத்தள்ளி எசமானெ பிடிச்சுக்கிட்டான். எடுவில்லெ. உடு அம்பெ.

[வில்லையேந்தி நிற்க.]

குக:—அடேடேபாவிங்களே ! போடுங்கொ பாணம்.

கோ:—(நாண் கயிற்றைக் காதளவிழுத்து) இதோ போட்டோம். கொண்ணூட்டோம்,

குக:—சீ! சீ! கீழே போடுங்கொ; கும்பிடுங்கோ; சாமிக்குமேலெ பெரியசாமி இவன்.

[வேடர்கள் கும்பிடுகிறார்கள்.]

பர:—அன்பர்காள் ! எழுந்திருங்கள். நண்ப ! நின் புகழ்ச்சிக்கு யான் அருகனல்லன். அன்பனையன்றி ஆதரியாய். பகை யென்று என்னை நீ நினைத்ததும் அது பற்றியே. நின்னுயர் குணங்களை இது வெளியாக்கியது.

குக:—மன்னிச்சாத்தான் காலெ விடுவேன்.[1] கைவிட்டா உன் காலிலெ என் கொலெ.

[தற்கொலை புரிந்துகொள்ளத் தனது கட்கத்தை எடுக்க, பரதன் தடுக்கிறான்.]

பர:—ஆ ! ஆ ! நீ கொலையுண்டால், என் குலமழியும். மனந்தேற மன்னித்தேன். எழுந்திரு.

[குகனைக் கைகொடுத்து எழுப்புகிறான்.]

குக:—அப்பா ! ஓங்கப்பன் ஒயுங்கு தப்பினான். நீ அதெ நிறுத் தினெ. ஒன் கொலத்தவங்கொ பொகழெல்லாம் ஒன் பொகழாக்கிக்கிட்டே. ஒன்னெப்போலெ தம்பி உண்டா? நாடு இல்லேன்னான் ஓங்கப்பன். காடுவந்தார்[2] எங்கப்பன். அதிலென்ன அதிசயம் ? வலுவிலெ வந்த செல்வத்தெ வெலக்கி வந்தையே ! ஆயிரம் ராமர் ஒனக்கிணையா ?

பர:—அன்பனே! மனப்புண் அதிகரிக்க, இன்னும் என்னைப் புகழ் வையோ? அந்நெடியவன் இணையடியடைய, உன் துணை யினை நாடினேன்.

---

(1) பாகவதாபசாரத்தைப் பரிகரிக்க பகவானுக்கு மொண்ணாது.

(2) ஜகத்பிதா.

குக:—ஆத்தெக்கடந்து அக்கரெ போனரு.

பர:—நெடுங்கான் நடந்தனனோ? எங்கென்று தேடுவேன்? எங்ஙனம் நாடுவேன்? பழுதே பலபகலும் போயின. சேவடியைச் சேவிக்கப், பாவிக்கும் வாய்க்குமோ? துணைவ! பெருகிவரும் இப்பெருவெள்ளங் கடக்கப், பேரருள் புரிவையேல், துயராழிக்கரையினின்றும் கரையேற்றிக் காத்தவனுவாய். கண்ணுக்கினிய கருமுகில்வண்ணனையும் காணப்பெற்றவனுவேன். குலமுதல் புகலிடம் காணேன். கண்டு நீ தருவையோ?

குக:—கவலையேன்? காணலாம் வா. (வேவேரை விளித்து) அடே! ஓடங்களெ உடனே கரையோரம் ஒதுக்கிவையுங்கொ.

கோங்:—அப்படியே.

[வேடர்கள் போகிறார்கள். பரதன் முதலானோர் சிறிது தூரம் செல்ல.]

பர:—நற்றுணையே? கற்றரையில் புற்களைப்பரப்பிய இப்படுக்கையிற் படுப்பவன் யாவன்?

குக:—நாடுவிட்ட நாயகனெ என் வீடுவர வேண்டினேன். நாய் வீடு நாட மனமில்லெ.[1] மடைத்தலெமேலெ படுக்கும் குடியானவர்போல கங்கெ தண்ணியெ அள்ளிக் குடிச்சு, அந்த அயகனும் அம்மாளும் ஒறங்கின எடமிது.

பர:—(அடங்காத்துயரம் அடைந்து) ஆ! பாவி! பரதா! பாதகா! நின்பொருட்டன்றோ இப்பேரிடருற்றது. சீ![2] இடாமிவ் வுடலைப் பொடிபட நறுக்கினும, கடகளிறிடற்றினும் குரைகடலமுக்கினும், எரிதணல் மடுக்கினும் பாழ்நரகுய்க்கினும், பாவமொன்றிலது. அந்தோ![3] மெல்லணைமேல் முன்துயின்றவர், இக்கல்லணைமேல் கண்துயிலக் கண்டு மிருந்தனையோ? வல்வினையேன்! இல்லையேல், இந்நேரம் என் கன்னெஞ்சம் இருபிளவாய் வெடித்திருக்குமே! அண்ணா! மன்ன! மாமணிவண்ணா!

[மூர்ச்சிக்கிறான்.]

(1) சரணாகதர்களாகிற நற்பயிர்களைக் காக்கவந்த குடியானவர்க்கு மடைத்தலையில் படுக்கை பொருந்தும்.

(2) இராமனுக்கும் தனக்கும் பிரதிபந்தகமாகிய.

(3) பஞ்சணை; பன்னகபரியங்கம்.

சத்:—அந்தோ! என் காவலன் நெஞ்சழியக் கண் சுழல மிடுகின்றதே! (கைகொடுத்து எழுப்பி) அண்ணு!

பர:—துணைவ! என் வாழ் நாள் வீணே. இனி ஏதேதுறுமோ?

குக:—அன்பனை காணும்வரைதான் துன்பம். வருந்தாது வா.

பரத:—ஆருயிர்த்தோழா! நேயம்பூண்டு பின்படர்ந்து [1] வந்தவன், தன் காயம் கிடத்திய தெங்கு?

குகன்:—[2] ஒறங்குவாஞ? ஒருவனெ நம்புவாஞ? இந்த வேடனெ அவன் நம்பலெ. அவன்மேலெ எனக்கும் நம்பிக்கெ கொறைவுதான். நாலுபக்கமும் பாத்து வில்லெ கையிலெடுத்துக்கிட்டான். நானும் என் வில்லெயும் வாளெயும் ஏந்திக்கிட்டேன். சுத்திச்சுத்தி வந்தான். அவன் பின்னேயே சுத்தினேன். எமெகூட கொட்டாமெ ராவெல்லாம் காத்திட்டான். நானும் பாத்திட்டேன். [3] அவன் தொணெ ஒன்னே போதும். எவனெயும் அண்ட உடான்.

பரத:—ஊனுறக்கங்களினும் இணைபிரியாது உடனிருந்தவன், நெய்தலும் ஆம்பலும் போல் ஒட்டியுறைந்தவன், கெடுமிடத்துக் கைவிடுவனே? பாவியான் பிறந்து அவர் துன்பத்திற்கு ஏதுவானேன். அவன் அதைத் துடைக்க நின்றுன். நீவிர் இருவரும் அருந்துணையிருக்க, அவர்கட்கு இங்கென்குறை? இவ்விடம்விட்டு அகலவிட்டனையே!

குகன்:—நாய்க்கு நலம் வாய்க்குமா? "காய், கனி, ஊனு, தேனு அல்லாம் தாரேன். நல்லா உண்ணலாம். நெலச்சு இங்கெ தங்கலான்னு கெஞ்சினேன்." வச்சமனம் கொஞ்சமும் மாறலெ. இச்சை என்னமோ தெரியலெ. அப்பாலெ போவ நெனச்சாரு. அப்படியே போனுரு.

பரத:—எங்குளரோ? கருமணியைக் கண்டுகொண்டு என் கண்ணிணைகள் களிக்கும் நாள் எந்நாளோ?

---

(1) படர்ந்து வந்தவன்;—படர்ந்து உவந்தவன்.—(இலக்குமணன்).

(2) பரமபதத்திலும் உறக்கமின்றி உழைத்த பன்னகாதிபன் பாவம் நிறைந்த பாரினில் உறங்கான்.

(3) பகைபோக்கிக் காப்பன்; உனக்கும் இடம் கொடான்.

" அரும்புண்டரீகத்தடியிணைக் கென்னெஞ்ச
மிரும்புண்ட நீராவ தென்றோ—விரும்பி
யறந்திருந்துங் கோயிலரங்காவுனை நான்
மறந்திருந்து மேற் பிறவாமல்."

—திருவரங்கக்கலம்பகம்.

[அன்னையர் மூவரும் வருகின்றனர்.]

குகன்:—(கோசலையைச் சுட்டி) நம்பீ ! இந்த அம்மா யாரு ?

பரத:—ஐயனது முதல் தேவி. பாவியான் பிறந்தமையால், தான் பயந்த பேறிழந்த பெரியாள்.

குகன்:—அப்பனெ பெத்த அம்மணி ! என்னையும் ஓன்மவன், தம்பியா எண்ணினான். ஒன்னையும் தாயென்னு நானும் நம்பினேன்.

[அடிபணிகிறான்.]

கோச:—மைந்தா ! இக்குணமணி யாவன் ? என் கண்மணி இருக்குமிடம் அறிவனோ ?

பரத:—வனசரர் அரசன் இவன். அண்ணனுக்கினிய நண்பன். நல்வழி உய்க்கும் நாவாயன். இவ்விளைஞனுக்கும் இலக்குவற்கும் எனக்கும் மூத்தோன்.

கோச:—மக்களே ! நாடிழந்து என்மைந்தன் காடடைந்தது, மிகவும் நலமே. நீவிர் ஐவரும் ஒருவராய் அப்புவி முழுதும் ஆளுவீர். அரும்புகழுடைவீர். அகமகிழ்வீர்.

குகன்—தாயே! நீ தயெசெய்தா, புவியாளனுமா ? தம்பி! (சுமித்திரையைச் சுட்டி) இந்ததேவி யாரு?

பரத:—அண்ணனையும் என்னையும் இணைபிரியா இருவரைப் பயந்தவொரு நல்லாள்.

குகன்:—அம்மணி! என்னதவம் பண்ணினையோ! ரெண்டுமெவனும் ரெண்டுமாணிக்கம்தான். மூணுபேரையும் ஓடத்திலெ ஏத்தி அக்கரெசேத்தேன். வேலைக்குமெச்சி கூலிதாரேன்னாரு. [1] வாங்குவேனா ? கேலிவானுன்னேன். வம்பு பண்ணி, அந்ததம்பி அன்பெ தந்து போனாரு. இனி, மூணுமவன் ஒனக்கு.

---

(1) கைங்கரியமே புருஷார்த்தம்.

சுமி:—அன்பனே! பேரன்பினுல் நீயே என்முதல் மகன்.

குகன்:—எனக்கு எனெ இனியாரு! (கைகேயியைச் சுட்டி)தோழா! தலெகுனிஞ்சு தனியே நிக்கிருகளே !· இவுங்கசேதி என்ன ?

பரத:—மேதினியில் இவள்போல் [1] கோதையர் இல்லே. எவள் அன்பையகற்றினளோ, ஐயனுயிர் உண்டனளோ, தனய னேயும் துயரக்கடல் தள்ளினளோ, அப்புண்ணியவதி இவளே.

"படரெலாம் படைத்தாளேப் பழிவளர்க்குஞ்
செவிலியைத்தன் பாழ்த்தபாவிக்
குடரிலேநெடுங்காலங்கிடந்தேற்கு
முயிர்ப்பாரங்குறைந்து தேய
உடரெலா முயிரிலாவெனத் தோன்று
முலகத்தே யொருத்தியன்றே
இடரிலா முகத்தாளே யறிந்திலேயே
லிந்நின்ருளென்னே யீன்ருள்" —கம்பர்.

குகன்:—தம்பி! தாயெ திட்டாதே. தாய்தான் தெய்வம். நல்ல தெய்வமோ, பொல்லாததெய்வமோ: தெய்வன்ன கும் பிடணும்.

பரத:—"இடராகவந்தென்னேப்புன்சிறு தெய்வங்களென் செயுமான்
இடராகவன்பிணி மாநாகமென் செயும் யான்வெருவி
இடராகவன்னிபுனலிடி கோண்மற்று மென்செயும்வில்
இடராகவன்னரங்கன்றிருத்தாளென்னி தயத்ததே"
திருவரங்கத்தந்தாதி.

குகன்:—தாயே ! இவன் என்தம்பி. தன்னெநொந்து, ஓன்னெ நொந்தான். மனம்நோவாதெ. மெத்த நல்லவன். இவனெ பெத்த ஓன்னெ ஓலகம் வாய்த்தும். தொரத்தின ராம னெ கண்ணுலெ பாத்தோம். பெருத்த பாவம் பறந்து போச்சு. கும்பிட்டேன்.

[பணிகிருன். வேடுவர் வருகின்றனர்]

கோ:—எசமான் ! படவுங்களெ கரையோரம் சேத்தோம். பாய் மரம், துடுப்பு, அல்லாம் எடுத்துக்கிட்டோம்.

---

(1) கோதையர்—மங்கையர்; குற்றமுடையவர்.

குகன்:—சந்தோசம். தம்பி! வா போவோம். அல்லாரும் வரட்டும். கண்ணாரக்கண்டு கையாரத்தொழுவோம்.

[அனைவரும் கங்கையைக் கடக்கின்றனர்.]

களம் 3 முற்றிற்று

## களம் 4

இடம்:—ஒரு காடு.

பாத்திரங்கள்:—பரதன், சத்துருக்கன், வசிட்டர், சுமந்திரர், மற்றும் நகரவாசிகள் பிரவேசம்

பரத;—"பிறவியெனுங்கடலழுந்திப் பிணிபசியோடிந்திரியச்
சுறவநுங்கக்கொடுவினையின் சுழலகப்பட்டுழல்வேனை
யறமுடையாயென்னப்பா வரங்கா வென்னாருயிருக்
குறவுடையாயடியேனை யுயக்கொள்வதொருநாளே,"

—திருவரங்கக்கலம்பகம்.

(வசிட்டரைவணங்கி) ஞானசஞ்சீவியே! யான் புரிந்த பெரும் பாவம், அவ்வருந்தவப் புதல்வனை நகரினின்று துரத்திய [1] தன்று. இன்றும், இம்மலையினின்றும் அச்செம்மலை அகற்றிட, எனக்குமுன் அப்பாவமே, சென்றிருக்கும். என்செய்வேன்? [2] மெய்த்திறத்தால் காண்பரிய மேக வண்ணனை, எத்திறத்தால் காண்பேனோ? கொம்புத்தேனை முடவன் இச்சித்தபடி முடியுமோ?

வசி:— புண்ணியரூபா !

"வினைவிடுத்து வியன்குணத்தாலெம்மை யாக்கி
வெருவுரைகேட்டவைகேட்க விளம்பினாலும்
தனையனைத்து மடைந்திடத்தா னடைந்து நின்ற
தன்றிருமா துடனிறையுந் தனியா நாதன்
நினைவழிக்கும் வினைவழிக்கு விலக்காய் நிற்கும்
நிகரில்லா நெடுங்குணங்கள் நிலைபெறத்தன்
கனைகழற்கீ ழடைக்கலமாக் காட்சி தந்து,
காரணனுந்தன்காவல் கவர்கின்றானே."

—வேதாந்ததேசிகன்.

(1) அன்று - அக்காலம்; அல்ல.
(2) மெய் - உடல்; சத்தியம்,

அவன் கருணைக்கு இலக்காகாத தீவினையொன்றில்லை. அடியவர்க்கு ஆவியவன்; அமுத சஞ்சீவியவன். அப் புனிதனடிதொழுதெழின், கொடுவினையொன்றும் தொடராது. வழிநின்ற வல்வினையும் மாயும். அழிவின்றி ஆக்கமும் தரும்.

சும:—ஆம். கர்மமானவை கோடி முன்னே செய்தாலும், அவன் கருணைப்ரவாக அருளைத் தாகமாய் நாடினவரை, வாதிக்க வல்லவோ ?

வசி:—வல்லவையல்ல. அன்றியும், இம்மாமலை யொன்றுமே தொழ, எவ்வினையுமோயும். விண்ணவரும், மண்ணவரும், விரும்பும் வெற்பிது; அண்ணலடியினை அடைவிக்கும் வெற்பிது.

பர:—(நகரவாசிகளைச் சுட்டி) அன்பரே ! இடையூறகன்றிட இறைவனடியினை மனமொருமித்து நாடுவீர். நான்கு பக்கலிலும் சென்று நீர் தேடுவீர். பாவியான் வருவதறிந்து அவன் அகன்றிட எழுந்திடின், அகலவிடாதவன் உபய திருவடிகளையும் அடைவீர். தாளில் கைத்தளை பூட்டுவீர். உறுதுணையாய் அவன் திருப்புகழ் பாடுவீர்.

"பொருளாகக் கண்டபொரு ளெவைக்கு முதற்
பொருளாகிப் போத மாகித்
தெருளாகிக் கருதுமன்பர் மிடிதீரப்
பருகவந்த செழுந்தேனாகி
யருளானோர்க் ககம்புறமென் றுன்னாத
பூரணவா னந்தமாகி
யிருடீர விளங்குபொரு ளியாதந்தப்
பொருளினையா மிறைஞ்சி நிற்பாம்.

—தாயுமானவர்.

எல்லோரும்:—"ஆதியங் கடவுளை யருமறை பயந்தனை
போதியங் கிழவனை பூமிசை யொதுங்கினை
போதியங் கிழவனை பூமிசை யொதுங்கிய
சோதியஞ் செல்வநின் திருவடி வணங்கினம்."

—சூளாமணி.

களம் 4 முற்றிற்று.

# களம் 5

இடம்:—சித்திரகூட பருவதம்.
பாத்திரங்கள்—இராமனும், இலக்குமணனும்.

இரா:—(பரதன் சேனையின்பேரொலி கேட்டு) இலக்குமண! இப்பேரொலி உண்டாயதேன்?

இல:—அண்ணா! வானத்திற் பெரும் புழுதி கிளம்பியது. (நான்கு திக்கையும் நோக்கி) வனவிலங்குகள் ஆங்காங்கு மருண்டு ஓடுகின்றன.

இரா:—வேட்டையாட எண்ணி, வேந்தரெவரேனும் இக்காட்டையடைந்தனரோ? அன்றி, கரைகடந்தகாதலால் நம் காவலரே கடுகிவருகின்றனரோ? ஒருவேளை, முனிவர் இயற்றும் அருந்தவத்திற்கு இடையூறுய், அரக்கரெவரேனும் அண்மநேர்ந்ததோ? அப்படியிருப்பின், அப்பாதகரை அரைக்கணத்தில் அழித்தொழிப்பேன்.

இல:—வருபவன் நம்பகைவனே! எண்ணரிய சேனைவெள்ளம் எங்கணும் படர்ந்துளது.

இரா:—வெஞ்சமரில் நம்மை வெல்லவல்ல வீரனுமுளனே?

இல:—ஊழ்வினை வலியால், உம் தோள்வலி உணரான். இவன் படையனைத்தையும் பாரினில் வீழ்த்த, இவ்விளைஞன் ஒருவனேபோதும். வானத்தெல்லையும் மறைய வெங்கணைகள் எய்குவேன். விண்ணவரும் மண்ணவரும் என் கண்ணெதிர்ப்படின், அன்னவர் படைவலியெலாம் பட்டிடச் செய்குவேன். எனதாற்றல் கண்டு, மாசுணம் தலைநொந்து சுழன்றிடும். வீசுதெண்டிரை அம்பு வெதும்பிடும். மேலையண்டமும் விண்டு பகிர்ந்திடும். என்கடுங்கொடுங் கார்முகம் வளைத்து, அவன் கடற்பெருஞ் சேனைக்கடலைக் கலக்குவேன்.

"தோளினால் வலியராகித் தொக்கவர் தலைகள்பாற
வாளினாற் பேசலல்லால் வாயினாற் பேசநேற்றேன்
காளமேகங்கள் சொல்லிக் கருணையாற் குழைக்குங்கைகள்
வாளமர்நீந்தும்போழ்தின் வழுவழுத் தொழியுமன்றே."

— சீவகசிந்தாமணி.

பரிதிகண்ட பனியெனப் பகைத்தளம் பறக்கக்காண்பாய்.

இரா:—சிலேவலவ ! ஆற்றலில் நீ கூற்றினும் கொடியனே. கருதிடில், உலகேழும் ஓர் கணத்தினிற் கலக்குவை. விளம்பல் வேண்டுமோ ? படையுடன் வருவதுபற்றியோ, பகைவனெனப் பகர்ந்தனை ?

இல:—பெருந்தகையே ! இடையூறிழைத்திட, நம் [1] மிடை வந்ததுபற்றியே.

இரா:—எவரிடத்தும் எனக்குப்பகை எள்ளளவும் இல்லையே !

இல:—நெடுநாள் நொந்திட, நின்னுடன் பிறந்த நோயனை நினையாயோ? அண்ணனுக்கு இன்னலிழைத்த அறிவிலியவன். அம்புவி தனக்கே நிலைக்க எண்ணிய புல்லியன். வஞ்ச மனக் கொடுவஞ்சகியின் மகன். வெஞ்சமர் விளைக்கவே வந்தனன் வனத்திடை. முழுமதியை விழுங்கவரும் அக்கோளரவம், இன்றென் கரவாளுக்கு இரையாகும்.

“ இருமையுமிழந்தவப்பரதனேந்து தோட்
பருமையுமன்னவன் படைத்த சேனையின்
பெருமையும் நின்னொரு பின்புவந்த வென்
ஒருமையுங்கண்டினியுவத்தியுள்ளம் நீ” —கம்பர்.

இரா:—சிறுவ ! பரதனையா பகைவனெனப் பகர்ந்தனை ? பாவியெனப் பழித்தனை ? நோயனென நொந்தனை ? இங்ஙிந்தனையேன் ? இதுவரை அவனிழைத்த தீங்கு ஏதேனுமுளதோ? புரியக்கருதியதாய் அறிந்ததுதான் உண்டோ? என்னடியார் அது செய்யார். அவனது தூய மனம் அறியாது தூற்றலாகுமா ?

இல:—பாவியின் மகனுக்குத் தூயமனமேது ?

இரா:—காவாய் நின் நாவை. விதியின் பிழை ! அவனைப் பழிப்பதேன்?

இல:—விதியா ? விதிக்கும் விதியாகும் என் வில்தொழில் காணுதி. அந்நஞ்சமன்னவனை இன்று யான் தகைந்

(1) இடத்தினுலும் பிறப்பினுலும் நடுவில் தோன்றிய பரதனைக்குறிக்கும்.

திலனேல், உன் தம்பியுமல்லேன்; இன்பனுமல்லேன்; அடிமையுமல்லேன். பொங்கியெழும் என் சீற்றக்கனலை இன்று ஆற்றுதருள்வை.

இரா:—பறவைகட்கிறைவனைவெல்ல, [1] அரவினுக்கொண்ணுமோ? [2] நீள் கரம் உயர்த்தி, [3] அக்கார்முகம் வளைத்த [4] தேர்திறத்தவனை வெல்ல, அத்திரத்தவனுமுளனோ? [5] அம்பரத்தவரும் அவன் [6] அம்பின்முன் என் செய்வர்?

இல:—நின் அருட்படை யொன்றிருப்பின், அவன் திரட்படை என்னெதிர் என்னும்? பாம்பின் வாய் கைவிடுபவன் படும்பாடறியான்.

இரா:—வீணே [7] பேரரவச் [8] சீற்றமொழி. மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா. தீக்குணம் தேடுவது தீயோர் இயல்பு [9] முன்னவனைப் பழித்தலே முறையெனக்கொண்டனை. தாய்தந்தையரையும் அன்று தகையத்துணிந்தனை உன் மத்த மனத்தனாய் இன்றும் உன் மூத்தவனை [10] முடிக்க முனைந்தனையா? என்பற்றி? மண்பற்றியா? தவத்தளவே யாகும் தான் பெற்றசெல்வம். நாடாள நினைவுண்டேல், நகரேகுவாய். நானிலமாளுவாய். உயிரினுமினியவன் வனமிருந்துய்வன்.

இல:—விடலரிய பெரிய பெருமானே! எனதுளத்தின் கருத்தினைத் திருவுளம் அறியுமன்றோ? அடிமையை அகற்றுவதழகோ? உன்னாலல்லால் யாவராலும் ஒன்றும் குறை வேண்டேன். ஒழிவில் காலமெலாம் உடனாய் மன்னி

---

(1) அரவினுக்கு—பாம்புக்கு.
(2) நீள்கரமுயர்த்தி—கையைத்தூக்கி; கையைக்கூப்பி.
(3) கார்முகம்—வில்; கரியமுகம்.
(4) தேர்திறத்தவன்—தேர்ப்போரில் வல்லவன்; தேர்ந்தபிரபன்னன்.
(5) அம்பரத்தவர்—பரமபதநாதன்; பரமசிவன்.
(6) அஞ்சலியாகிற அருங்கணையைக் குறிக்கும்.
(7) அரவச்சீற்றம்—பெரியகோஷம்; ஆதிசேஷன்.
(8) சீற்றமொழி—கோவம்தவிர்; கோவச்சொல்.
(9) முன்னவனை—தயரதனையும், இராமனையும், பரதனையும்.
(10) முடிக்க—அழிக்க; முடிசூட்ட.

வழுவிலா அடிமை செய்ய வேண்டுவன். எனக்கென்று இன்பமொன்றில்லை, அண்ணலே! உன்னையும் அறியாய். உன் பெருமையும் உணராய். பொறுமையால்வந்த நின் வறுமையை, யான் போக்காதிருக்கவா?

இரா:—வறுமையா? பெருமையே. அரியதொரு தருமம் அதுவே. தம்பியைக்கொன்றோ, அம்புவியாள்வது? அதருமவழியில் அவ்வானுளைப் பெறினும் வேண்டேன். ஏன்? பின்னவன் [1] பெற்றசெல்வம், முன்னவன் பெற்றதன்றோ? தம்பி திருவுற்று மகிழவும், தந்தை நெறிநின்றுய்யவுமே, வன முறையுமுறுதிபெற்றேன்.

இல:—அண்ணு! என்னுளம் இன்னும் ஐயுறுகின்றது கடலொலி யடங்கிடப் படையுடன் இவணடைந்ததுகண்டும், பரிவுடன் அவனைப் பாராட்டுவதா?

இரா:—அதனுலென்ன? அகத்தினழகு முகத்திற்றெரியும். களங்க மனத்தனுய்க் கலங்கலுற்றனை. தொல்குலம் விளங்கவந்தவன் அச்செல்வன். அறமனைத்திற்கும் அச்சாணியவன். தருமத்தின் தெய்வமே அவன். [2] செவியற்றனீ, விழியுமற்றனையா?

> "சேணுயர்தருமத்தின்றேவைச் செம்மையின்
> ஆணியையன்னது நினைக்கலாகுமோ
> பூணியன்மொய்ம்பினுய்போந்தநீண்டனைக்
> காணியநீயிதுபின்னுங்காண்டியால்.
>
> —கம்பர்.

[பரதன் வருநிலையை நன்குநோக்கி இலக்குவன் வெட்கிச் சிலைதுறந்து தலைகுனிந்து நிற்க]

சிலைவலவ! தலைகுனிந்து சிலைதுறந்து செயலற்று நிற்பதேன்?

இல:—கருணைபங்கடலே! [3] கார்க்கடலுடன் இரண்டறக் கலந்திடக் கரைபுரண்டுடைந்துவரும்[4] அக்கங்கைமாநதிபோல்

---

(1) இருவரும் பெற்றசெல்வம் தவச்செல்வமே.

(2) கட்செவி:—ஆதிசேஷன்; (இலக்குமணன்:)

(3)&(4) நதி கடல் புகுவதுபோல், பரதன் இராமனைச்சேர விரைகின்றனன். இராமன் கடலனையன்; பரதன் கங்கைபோல் பரிசுத்தன்.

பொங்கியவன் விரைகின்றனன். அந்நேயனது தூயமனம் அறியாது, பேயனுய்ப் பிதற்றியபிழை பொறுத்தருள்.
[இராமனடிவணங்க]

இரா:—நன்று. சான்றோர் சினம் நீர்கிழிய வெய்த வடுப்போல மாறும். அக்கோதிலாதவனை நீயே என்வயிற் கொணர்தி.

இல:—அப்படியே. [செல்கிறான்]

இரா:—சானகி! (சீதைவருகிறாள்.) [1] சந்திசெய்ய நின்றேன். வந்து [2] வழிபட [3] உதகம் தந்திடு.

[சீதைசெல்லுகிறாள். பரதனும் சத்துருக்கனும் ஒருபக்கம் பிரவேசம்.]

சத்:—(இராமனைக் கண்டு) அண்ணா! பகலோன் பகல்விளக்காகப் பரஞ்சுடர் தோன்றியது. காணரிய மேகவண்ணன் காண்கின்றானங்கு.

பர:—கண்டேன். [4] பகற்கண்டேன். பரஞ்சோதியைக் கண்டேன். வினையனைத்தும் விண்டேன்.

"கண்டேன் கமலமலர்ப் பாதம் காண்டலுமே
விண்டே யொழிந்த வினையாயின வெல்லாம்
தொண்டே செய்தென்றும் தொழுது வழியொழுக
பண்டேபரமன் பணித்த பணிவகையே."

—நம்மாழ்வார்.

[பரதனும் சத்துருக்கனும் விரைந்து வருகின்றனர். சீதை கமண்டலத்துடன் வருகிறாள். இராமன் சீதையுடன் கன்றைக்காண ஆவல்கொண்ட கராவைப்போல் விரைந்து செல்கிறான்.]

களம் 5 முற்றிற்று.

---

(1) சந்தி:—சந்தியாகால வந்தனை; சமாதானம்.
(2) வழிபட:—தொழ; ஒழுங்காக்க.
(3) உதகம்:—தண்ணீர்; (கருணாரூபிணியின்) கருணைநீர்.
(4) பகற்கண்டேன்:—பரமனைக்காணாத நாளெல்லாம் இருள்மூடிய நாளே; பிறவாநாளே.

# களம் 6

இடம்:—மலையின் ஒருபுரம்.

பாத்திரங்கள்:—பரதனும் சத்துருக்கனும் பிரவேசம்.

பர:
சத்: } —"விண்கடந்த சோதியாய் விளங்குஞான மூர்த்தியாய்
பண்கடந்த தேசமேவு பாவநாச நாதனே
எண்கடந்த யோகினோ டிரந்துசென்று மாணியாய்
மண்கடந்த வண்ண நின்னையார்மதிக்க வல்லரே."

—திருமழிசைப்பிரான்.

[இராமன் சீதையுடன் மற்றொருபக்கம் பிரவேசிக்கக்கண்டு, பரதன் விரைந்தோடி அண்ணன் அடியினையடையும் முன்னம் அலறிவிழுந்து]

பர:—அண்ணா! அண்ணா!

இரா:—(பரதனை மார்புடனணைத்துத் தழுவி) அன்பனே! துன்பமேன்? அடவியடைந்து அகமகிழ்ந்துளேன். திருமுடியோன் தீதிலனோ? தளர்வடைந்த தாதையைத் தனிவிட்டு வரலாகுமோ? (பரதன் மௌனம்) மன்னவனும் உனக்கு இம் முனிவேடமேன்? புனைந்திலையோ மௌலி? நனைந்திலையோ புனிதநீரால்? (பரதன்மௌனம்) நகரமாந்தர் உன்னை மன்னனாக மதித்திலரா? ஒப்பரியா உன்னை [1] யொப்பார் யாவர்? (பரதன் மௌனம்) வேந்தர் உரைமறுத்து, உளம்நொந்து வந்தனையோ? (பரதன் பெருமூச்சிடுகிறான்) இந்நெடுந் துயரமேன்?

[இலக்குமணன் திரும்பிவந்து பிரமித்து நிற்கிறான்.]

பரத:—அண்ணா! [பேசநாவெழாது தழதழத்திட.]

இரா.—நெஞ்சுருகி யேங்குவதேன்?

பரத:—கானகமே மிகவிரும்பி, நீ துறந்த வளநகரைத் துறந்து, அவர் வானகமே மிகவிரும்பிப் போயினர்.

இரா:—வானகமா!

---

(1) ஒப்பார்—நிகராவார்; ஒப்புக்கொள்ளாதவர்.

பரத:—நின்பிரிவெனும் பிணியினால் என்னைப்பெற்ற அக்கரியவள் வரமெனுங்காலனால், உடலை நீத்து உம்பரிற் கலந்தனர்.

[இராமனும் சீதையும் அடியற்றமரமென விழுகின்றனர். வசிட்டரும் சுமந்திரரும் வருகின்றனர்.]

இரா:—ஆ ! என் அருமைத்தந்தையே ! உயிரின் உயிரே ! புகழின் புகழே ? மெய்யின் மெய்யே !

"நந்தாவிளக்கனைய நாயகனே நானிலத்தோர்
தந்தாய் தனியறத்தின்றாயே தயாநிலையே
எந்தாயிகல் வேந்தரேறேயிறந்தனையே
அந்தோவினி வாய்மைக்காருளரே மற்றையா."

—கம்பர்

நான் கானடைந்தேனெனத் தரியாது, நீர் வானடைந்தீர். உம்மையிழந்தும் வாழ்வுகந்து இன்னுமிருந்தேன். அண்ணலே ! வாய்மையும் மரபுங்காத்தவள்ளலே ! வேள்வியியற்றி, என்னைப் பெற்று, என் பெற்றீர் ? நும்முயிர் நீங்கப் பெற்றதுவோ ? அந்தோ ! நும்முயிர்க்கும் கூற்றுவனாயுற்றேனே ! இலக்குமணா ! தந்தையென நின்ற தனித்துணையே ? நின்தாதையை இழந்தனையே! மைதிலி! மகளிலாக் குறைநீக்கிய மாமகளே ! நின்மாமன் மாண்டனரே !

இல:—ஆ! ஐயனே ! அன்பனைத்துறந்து ஆவியும் நீத்தனையோ ? அத்தனே! உத்தமகதி யுற்றனையோ?

வசி:—இலக்குவா ! [1] உனக்குமா இக்கலக்கம் ? சோதரர் இருவரும் இவ்வாறு சோகிக்கலாகுமா ? ஆவாரை யழிப்பவர் யாவர் ? சாவாரைத் தவிர்ப்பவர் யாவர் ?

[இராமன் சீதையைத்தேற்றுகிறான்.]

இரா:—மறையவரே ! இறைவர் அகற்றிய நகரினையனாக, என்னுளம் இனி நினையுமோ ?

வசி:—தயரதன் பெற்ற தவப்பயனே !

---

(1) உனக்குமா—சகலமுந்தெரிந்தும் இராமனே என்றறிந்த; தந்தையை சிந்திக்க

" மலைமிசைத் தோன்று மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர்—நிலைமிசைத்
துஞ்சினு ரென்றெடுத்துத் தூற்றப்பட் டாரல்லா
லெஞ்சினு ரிவ்வுலகத்தில். " —நாலடியார்.

மறைகளின் வரம்புகண்ட நீயுமா கலங்குவது? துயரக் கடல் மூழ்கியுழல்வது? பிறத்தலும் இறத்தலும் இயற்கை யென்பதை மறந்தியோ? மின்னின் நிலையில மன்னுயிர் ஆக்கைகள். அங்ஙனமிருக்க, அவனியனைத்தும் அறு பதினுயிரம் ஆண்டுகள் ஆண்டவன் மாண்டது கண்டு, மனமிடியலாகுமோ! காலமென்றவலை அக்காலனுக்கும் கடக்கற்பாலதோ? கண்ணீர் சிந்திக் கரைந்தழுது, இனி யென்னுவது? நின் கமலக்கையால் நீர்க்கடன் கழித்துக் [1] கடைக்கடன் முடிக்கக் கடவாய்.

[எல்லோரும் செல்லுகிருர்கள்.]

களம் 6 முற்றிற்று.



# களம். 7

இடம்:—சித்திரகூடத்தில் ஒரு பன்னசாலை.

பாத்திரங்கள்:—இராமனும் தம்பியரும், வசிட்டரும், சுமந்திரரும் குகனும், மற்றுமுள்ள நகரவாசிகளும்.

பரத:—அண்ணு! அறந்தனை நினைந்திலை. அருளினை நீத்தனை. சிறந்ததொரு முறைமையும் துறந்தனை. பிறந்தனையே பரதாவென, வையம்பழித்திட வைத்தாய் என்னை. நில உலகை நோய்செய்த பெரும் பாவகாரியிற் பிறந்த

(1) கடைக்கடன்—சரமருணம்.

பாவியேன் வந்துளேன். ஆவியும் துறந்திலேன்! மாதவம் புரிவதுமோர்கிலேன். யாவனுகி இப்பழி நின்றேறுவேன்?

இரா:—பரதா! பழியேனுனக்கு? பழிப்பதேன் அன்னையை? இழிவென்னெனக்கு? இகழ்வதேன் எந்தனை? ஐயன் ஆணையால் வையம் நின்னதே. மன்னவனுய் நீ இருக்க, மானிலத்திற்[1] கென்குறை?

பரத:-மூவுலகுமாள வந்த முதல்வ! மநுநெறிமுறையில், உனக்கே யுரியது இம்மானிலத்தரசு. அம்முறை துறந்து, மனைவி யொருத்தியை மகிழ்விக்கவெண்ணி, உன்னையுமகற்றி, உனதரசியல் ஆக்கத்தை எனக்காக்கினர் அரசர். அதைத் தவறென மதித்தலும் தவருே?

சத்:—குற்றம் புரிந்தவர் கொற்றவரேயாயினும், அவர் குற்றம் குற்றமே.

இரா:—கதிரவன் குலத்து உதித்தவரெவரும், குற்றமற்றவர்களே. ஒப்புயர்வற்ற நமது அப்பனே பிழைப்பவன்? வரதன் தரவே, வரம்பெற்றவள் இவ்வையம் சரதமுடையாள். அச்செல்வியின் செல்வனே செங்கோலுக்குரியவன். ஆன துபற்றி, அவனியாளும் அரும்பேறு நீ பெற்றனை. நானெனில், தாய்வரங்கொளத் தந்தையேவலால், மேயநம்குலத் தருமமேவினேன். நீ வரங்கொளத் தவிர்தல் நீர்மையோ? மெய்த்திறத்து மன்னரைப்,பொய்த்தினர் ஆக்குவையோ?

பரத:—ஆதியஞ்சோதியே! நீதியோ நீ யோதுவது? அறம் கொல்லும் வரம் கோரலும், தரலும், தவறே. வரன்முறை தவறியபணி தவிர்க்கற்பாலதன்றே?

இரா:—என்ன! நன்னெறிக்கோர் நிலையமென நானிலம் புகழும் அப்புனிதரை, அறநெறியில் நிலைநின்ற அறக்கடவுளை, வாய்மையைக் காக்கவே ஆவியும் நீக்கிய மெய்யரை, மற்றும், நம்மைப் பெற்றவரையா இவ்வாறிகழ்ந்தனை?

பரத:—[2] நஞ்சம் கலந்ததால், நன்னெஞ்சும் கலங்கியது. நானிலம் இகழும் நஞ்சேயாயது. வஞ்சனையால் வையம் பறித்த

(1) என்ன குறை; என்னுடைய குறை.
(2) கைகேயியைக் குறிக்கும்.

னள் அப்பாவி. கடியவெங்கானிடை உன்னையுய்த்தனள். மன்னரை முடித்தனள்; நன்னகர் அழித்தனள்; இன்னலில் என்னையும் அழுத்தினள்.

இரா:—ஆ! ஆ! பரதா! நீயா இவ்வெம்மொழி மொழிந்தனை? செவியினைத் துளைத்தனை? மருமமும் பிளந்தனை? கரை கடந்த கற்புடைக் காதலியா, கணவனுயிர் கவருவள்? பொருசமரிலும் பிரியகிலாது, தலைவருடன் சென்று, அன்று, போர்முனை நின்று உதவினள் அத்தெய்வக்கற்பினள். மெய்யன்பினால், என்னைப் பயந்ததாயினும் பன்மடங்கு அதிநேயமாய் வளர்த்து, மகிழ்ந்தனள். அத்தகைய தனித்தாயை, மங்கையர்க்கரசியை, உத்தமிகட்குத்தமியை, நீ வயவுரைகொண்டு வைவதா? பகையெனப் பழிப்பதா? பாவியென்றிகழ்வதா? தொல்குலம்தோன்றிய தூயவன் நீயா? பகையும் பொறாமையும் அன்னை கருத்தாயின், என்னை ஏழிரண்டாண்டினில் வந்திட வேண்டுவளோ? அந்நகரை யான் என்றும் அணுகா வண்ணமன்றோ, வரம் பெற்றிருப்பள்? தாயினு முயரிய கோயிலுமில்லை. தந்தைசொன்மிக்க மந்திரமுமில்லை. பெற்றவர் கருத்தறிந்து ஆற்றுபவரன்றோ, புத்திரரில் உத்தமர்.

சத்:—குன்றனைய [1] குற்றம் புரியினும், குணங்கொள்ளும் வள்ளலே! தினைத்துணை நன்றிசெய்யினும், பனைத்துணையாய்க் கொள்ளும் பெருந்தகையே! குற்றமற்ற தன்குரிசில் ஒருவனே, குவலயம் ஆள்வது கொற்றவர்கருத்து. அந்நினைவு அவர் நெஞ்சைவிட் டகன்றிலது. ஆங்கது நினையாது நீ நீங்கவே, நின் திருவுருவைக் காணாது கரைந்தவர் ஆரற்றினர். மனமிடிந்து மாண்டு போயினர்.

இரா:—மேலை விதியினை வென்றவர் யாவர்?

> "முதிர்தரு தவமுடை முனிவராயினும்
> பொதுவற திருவொடு பொலிவராயினும்
> மதியினராயினும் வலியராயினும்
> விதியினையாவரே வெல்லு நீர்மையார்."
>
> —கம்பர்.

---

(1) குற்றம் கொள்ளாது குணம் கொள்ளல்; குற்றமே குணமாகக் கொள்ளல்.

தனையராயினோர் தந்தைதாயரைப் புகழ்பெறச்செய்யவா? பழியுறச்செய்யவா ?

பரத:—பழியினைப் போக்காதிருக்கவா ?

இரா:—பழியுளதென்பது அழியாப்பிழையே. பெற்றோர் புதல்வரை விற்கவும் பெறுவர். அவரது பணி யெதுவெனினும், அதை எப்போது மேற்பது, எவர்க்கும் கடனே. அத்தருமம் உணர்ந்தவர், உலகினில் உய்ந்தவர். அன்று சகரகுமரர், ஆருயிர் போக்கி அரும்புகழ் பெற்றது, சனகனுரையேற்றே. தந்தைசொற்கிணங்கியே தாய் தலை துணித்துத் தன்கடன் தீர்த்தனன் [1] அவ்வந்தண குல மணியும். தாதையின் இதமொழி, நமக்கு நாளும் நன்மையே பயக்கும்.

பரத:—பயக்கும் நன்மையை வியக்கக்கண்டோம். நாடிழந்து நீ காடடைந்தாய். கேடடைந்து யான் பாடடைந்தேன்.

இரா:—" ஆக்கமும் வறுமைதானு மல்லலு மகிழ்வுமெல்லாம்
நீக்கமில் லுயிர்கட்கென்றும் நிலையெனக் கொள்ளற் பாற்றோ
மேக்குயிர் கடவுட்டிங்கள் வெண்ணிலாக் கதிரின் கற்றை
போக்கொடு வரவுநாளும் முறை முறை பொருந்திற்றன்றோ."
—'கந்தபுராணம்.

விளைவது எதுவாயினும், தழுவியொழுகும் கடமையை நழுவவிடுதல் மடமையே.

பரத:—தொன்று தொட்டுவரும் தருமத்தினை இருவர்பொருட்டுக் கொன்றுதின்றிடலோ ?

இரா:—அடாதவழக் கடுக்காது. வாய்மொழி மதியாது, வாதிக்க வந்தனை. தந்தைபட்ட கடன் தீர்த்திடல், மைந்தர்தம் கடனே.

பரத:—நெடியோனே ! அடிமை போராட முடியுமோ ? அரசு கொள்ளில், அறம் கொன்று தின்றபாவம் என்னைச்சாரும். பிறப்புரிமையிலா அரசைப்பெற, யான் என்றுமிசையேன்.

(1) பரசுராமன்.

இரா:—அரசுரிமை உனக்கிராவிடின், அவ்வாக்கமுனக்கு ஆக்கி யிரார் அரசர்.

பரத:—முற்பிறந்த நீயிருக்க உன் பிற்பிறந்தஎனக்கும் உரிமையா? மநுநெறி அவ்வாறு கூறியதுண்டோ ?

இரா:—பிறப்பால் உனக்கே உரிமையாக்கும் மரபுடை முன்சொல் உண்மையொன்றுளது. அப்பண்டை வரலாற்றை இது வரை யறிந்திலைபோலும். மன்னவர் உனது அன்னையை மணக்குங்கால், மணப்பரிசமாக வழங்கினர் தமதரசினை. அப்பரிசமதை யனுசரித்தே, அரசினை உன் அன்னை யிரந்ததும்; மன்னர் அதற்கிசைந்ததும்.

சத்:—இறைமக்களுக்குரிய தொல்லரசளிக்க, இறைவருக்கு உரிமையுமுளதோ ?

இரா:—கொற்றவர் முற்றுரிமையுற்றவர். அன்றேல், அறநெறியில் நிலைநின்ற அரசர், அங்ஙனம் தந்திரார். மூதறிவுடைய முதியோரும் அதை ஆமோதித்திரார். அன்றியும், அன்று யாம் பிறந்திலமென்று அறிவை.

பரத:—பிறந்த பின்னரோ ?

இரா:—அன்று வழங்கிய வாசகம் என்றும் சரதமே.

இல:—அங்ஙனமாயின், அனைவருமறிய அப்பேரவையில் எங்ஙன மிசைந்தனை அரசினையேற்க ?

இரா:—மன்னவர் சொன்னசொல் மறுக்க அஞ்சியே. பரதா! என் மொழிப்படி நீ நல்வழி நாடுவாய். நாடாளுவாய். நீண்முடி சூடுவாய்.

பரத:—நீ சடைமுடி சூடி இக்கடுங்காடிருக்க, நான் நீண்முடிசூடி அந்நெடு நாடிருக்கவா? நீ புல்லாதனம்அமர, நான் பொன் னாதனம் அமரவா ? நீ அரணியமாள, நான் தரணியுமாள வா? மாமரக் காற்றையேந்தி நீ கந்த மூலங்களுண்டு காயம் வருத்த, சாமரைக்காற்றையேந்தி நான் கன்னலும் அமுது முண்டு வாழ்வுமுகக்கவா ?

இரா:—அதனாலென்ன? இடர்காணேன் இவ்வடர்கானில்.

" தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார் மற்றல்லார்
அவஞ்செய்வாராசையுட்பட்டு. " —திருக்குறள்.

வனமுறைவோர் இன்புறுவரேயன்றித் துன்புறார்.

சத்:—செல்வம்தரும் பங்கயச்செல்வி இங்குறைய, ஆங்கென்னுளது. இருள்மூடி அந்நாடு அன்றே கடுங்காடாயது இக்காடே நன்னாடாயது.

பரத:—முன்னவனே! மன்னவனே! நான் ஆகாத வண்ணமே இவ்வண்ணம்ஆயினையோ? ஆதரவு வையாது, என் அறிவினை மறைப்பதும், அருளோ?

" திரையார் கடல்சூழுலகின் தவமே திருவின் திருவே
நிறையார் கலையின்கடலே நெறியார்மறையின் னிலையே
கரையாவயர்வேனெனை நீ கருணாலயனேயெனினென்
றுரையாயிதுதானழகோ வுளநொந்தடியாரலைதல். "

—கம்பர்.

அண்ணலே! மண்ணினை நாடிடேன். உன்னையே நாடினேன். அடிமையின் உடல் பொருள் ஆவியனைத்தும் உனதுடைமையே. உடையவனே! உனக்கு உறவொழிக்க வொண்ணாது. தவவிரதம் தகாது. காய்கனி தின்று நீ கானிலலைந்து காயம் வருத்த, யான் கணமும் தரியேன். நின்பதமலர் நினைந்து, என் கரமலர் குவித்து, நின்பால் எல்லையிலன்பால் வேண்டுவன்.

" முன்னர்வந்துதித்துலக மூன்றினும்
நின்னை யொப்பிலா நீ பிறந்தபார்
என்னதாகில் யானின்று தந்தனென்
மன்ன போந்து நீ மகுடஞ்சூடுவாய். " —கம்பர்.

[1] பாலனமேற்கப் பரிவுடன் வருவாய்.

இரா:—அன்பின் அரியவுருவே! அன்று அறுதியிட்ட, ஆண்டுகள் பதினான்கும், இன்றோடு முடிந்தனவோ?

பரத:—வள்ளலே! எல்லாம்வல்ல நீ என்னையும் வாழ்விக்கவல்லையோ? பாவம் நிறைந்தவர் என் போலில்லை. அருளிற் சிறந்தவர் உன்போலில்லை. நெடியோனே! நின்னடியை

(1) பாலனம்—பரிபாலித்தல்; பால்கலந்த அன்னம்.

யான் விடுவேனோ? வனமகன்று வாராயேல், அடிமையுன் னடிக்கீழ் அமர்ந்துறையவாவது அருள் புரிவையோ?

இரா:—இல்லறம் உனக்கில்லையேல், துறவறம் எனக்கில்லையே.

சத்:— இல்லறமல்லது நல்லறமன்று.

இரா:—சொல்லறமல்லது சொல்லல்ல. சோதரா! நல்லறம்பெற்று நீ நானிலமாளுவை. உன்னையன்றி மன்னவனில்லை.

பரத:—இன்னுமென்னை மன்னனெனவே மதிக்கின்றனையோ?

இரா:—ஏன்?

பரத:—அப்படியாயின், அதன் உண்மையை இப்பொழுதறிவேன். அண்ணு! உன்னை என்வயமாக்கி வையமுனக்காக்குவேன், புவனம் புகழினும் சரி. ககனம் இகழினும் சரி. என் செங்கோல் ஆணையை எங்கும் செலுத்துவேன். மன்னவன் ஆணை கடவாதொழுகுவை. நகரேகுவை. நீண் முடி சூடுவை.

இரா:—மன்னவரானவர் சொல்லினும் செயலினும்ஒன்றினொன்று முரண்படுவரோ? சற்றுமுன், எனக்கு அடிமை பூண் டொழுகுவன் என்றனை. அந்நிலைமாறி என்னையாளுடைய நாயகனாய் ஆணையிடுகின்றனை. பின் உண்மை நிலைதான் என்னோ?

பரத:—அந்தோ! நுண்ணறிவிலேன். மதிமயங்கி, மன்னனைப் போல் ஆணையிடலாயினேன். மன்னிப்பாய். நான் உன தடிமை. அடிமையினடிமை. அகற்றாது ஆட்கொள்வாய்.

[பணிகிறான்.]

இரா:—அடிமை [1]யாயின், ஆணை கடவாது அவனியாளுதி.

பரத:—அருளால் அறமருளும் அருளாளா! ஆளும் வகையறி யேன். வாழும் விதமறியேன்.

" மருந்தறியேன் மணியறியேன் மந்திரமொன் றறியேன்
மதியறியேன் விதியறியேன் வாழ்க்கைநிலை யறியேன்
திருந்தறியேன் திருவருளின் செயலறியேன் அறந்தான்
செய்தறியேன் மனமடங்குந் திறத்தினிலோ ரிடத்தே

(1) ஆயின்—ஆனல்; ஆராயின்.

இருந்தறியேன் அறிந்தோரை யேத்திடவு மறியேன்
எந்தைபிரான் மணிமன்ற மெய்தவறுவேனே
இருந்திசை சொலவறியேன் எங்ஙனநான் புகுவேன்
யார்க்குரைப்பேன் என்ன செய்வேன் ஏதுமறிந்திலனே."
—திருவருட்பா.

உன்னையன்றி வேறுதுணையிலாத் தமியேன், வாழ்நாள் வேண்டேன். நின் அடிசூடும் அரசையல்லால் அரசொன் றும் அறியேன். உயிரும் நீயே; வினையும் நீயே; பயனும் நீயே; குறையொன்றும் இன்மையால் இறையும் நீயே; நற்பதம் தருவதால் கற்பகம் நீயே. துன்பம் துடைத் தலால் இன்பமும் நீயே; காணிடில், உன் திருவுருவே காண்பன். பாடிடில் உன் திருப்புகழே பாடுவன். சூடிடில், உன் சேவடியே சூடுவன். நின் பதமலரை யன்றி வேறு [1] மணமலரை என்றும் மதியேன். ஆதாரமற்றவையும் எனக்கு, உன்பாதாரவிந்தமே கதி. குலமுதலே! புக லொன்றிலா வடியேன் உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந் தேன். [2] அச்சுதனே! அடைக்கலம் புகுந்த அடிமையின் இடர்களைவாய்.

இரா:—அருயிரனையாய்! என் வாய்மொழி என்னுவது?

பரத:—என் சபதம் வீணுவதா?

இரா:—வீண் வாதம் விடு.

சத்:—பங்கயக்கண்ணு! பார்புகழ் மன்னு! பொன்னருள் பூத்த புண்ணியா! உன்னைச்சரணம் அடைந்தார்க்கு அபயமி லையோ?

இரா:—சத்துருக்கா! உனக்குமா இம்மயக்கம். [3]முன்சொற்காத்த பின்னரே, பின்சொற்காக்கவொண்ணும்.

---

(1) மணமலரை—மணமுள்ள புஷ்பத்தை; மணம்புரிந்த மனைவியை. (அங்கம் 1-களம் ஒன்றில் காண்க)

(2) அச்சுதன்—சரணமடைந்தவனை நழுவவிடாதவன்; அழிவில்லாதவன்; குணம் மாறாதவன்.

(3) தேவர்கட்கும் தாதையர்க்கும் அளித்த சொல்.

பரத:—ஆவியே! அமுதே! அற்றவர்கட்கருமருந்தே! நின் நல் வரவு நோக்கியே நலியும் நகர் உறைவார்க்[1]கென்கதி சொல்லாய்.

இரா:—நின்கதியே நற்கதியெவர்க்கும்.

பர:—நற்கதியோ? நிற்கதியே? (ஜனங்களை நோக்கி) ஏழையீர்! சிந்திக்க நெஞ்சிலையோ? வந்திக்க மெய்யிலையோ? துயரகல எழுமின்; தொழுமின்; பணிமின் இப்பரமனை.

[அனைவரும் இராமபிரான் பதத்தினில் பணிகின்றனர்.]

வாமனன்:—இராமா! அபிராமா! சுகுணபிராமா! [2] சம்சாரம் சாரமற்ற தறிந்தோம். உறவினர் உதவாத துணர்ந்தோம். அவரைப் பிரிந்தோம். முற்றும் மறந்தோம். நின் பொற்றாமரையடியே போற்றினேம். எற்றைக்கும் உந்தன்னோடுற்றோமே யாவோம். உனக்கே நாம் ஆட்செய்வோம். காதலித்த எம்மை யாதரித்தருள்.

இரா:—அன்பரே! ஆரியரே! நெறிமுறை நினைவீர். உறுநிலை யுணர்வீர்.

வாம:—மைதிலி மணாளா! தம்மை யுகப்பாரைத் தாம் உகப்பர் என்னும்சொல் தம்மிடையே பொய்யானால், சாதிப்பார் யாரினி?

இரா:—உயிரினையும் விடுவேன். உயிரினுமினிய திருமகளையும் விடுவேன். இறைவன் ஏவலை எள்ளளவும் விடேன். வாய்மையை என்றும் கைவிடேன். இது வேதமொழியாகும்.

வாம:—இரக்கமுனக்கு இன்னுமெழாதது எம்பாவமே.

பரத:—இருதலைக் கொள்ளியின் உள்ளெறும்புபோல் ஆனேனே! இப்படியா முடிந்ததென்கதி! எப்படி உய்வேன்? (சற்று யோசித்து) ஆம். ஆள்பவர் ஆள்க அந்நாடு. நான் இப்பனிபடர் காடுடன் படர்தலே மெய். புற்களைப் பரப்பி இப்படியினிற் கிடப்பேன்.

[தருப்பைப் புற்களைக் கொய்துவரச் செல்கிறான். சத்துருக்கனும் பின்தொடருகிறான்.]

---

(1) என்கதி—என்னகதி; என்னுடையகதி; நான்திரும்பிச் செல்லல்.
(2) வாமனன் சொற்களால் பிரபன்னனுடைய ஐந்து அங்கங்களும் நன்குணர்க.

வசி:—அவனன்றி யோரணுவும் அசையாது.

" வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்தலரிது."

—திருக்குறள்.

ஆளான் பரதன், மீளான் முதல்வன்.

குகன்:—நம்பி! ஏன் வம்பு? ஒன்னை நம்பிவந்த நல்ல தம்பி நொந்து அலைவான். அன்புவை.

ஜாபாலி:—இராமசந்திர! இதுவரை உன்பிறவி எத்தனையோ! எத்தனை அன்னையோ! அப்பனெத்தனையோ! இறந்தேகின தந்தைக்கு, இனியுன்னால் ஆவதொன்றில்லை. பொய்யெனும் உலகினில் மெய்யுளதெனின், அது பொய்யே ஆகும்.

" மாயையால் விளைந்த வண்ணமல்லது வாய்மையாக
மாய்தலும் பிறத்தலுமும் மன்னுயிர் தனக்குமில்லை
மாயையிற் றீர்ந்து நின்ற மற்றுனக்குண்டு கொல்லோ
மாயைநின் றேற்ற மெல்லா மதிக்கினோர் விளையாட்டன்றே."

—பாகவதம்.

மறையாவது! நெறியாவது! வாய்மையாவது! தூய்மையாவது! புண்ணியமாவது! விண்ணுலகாவது! எண்ணரிய தவத்துளார் எண்ணிலா ஊழியூழி தவம் செய்தும், எண்ணிய பயனடையாது இன்னும், அண்ணுந்துளர். வீணே வனந்தனில் வருந்துவதொழி. மறுமையை யறவே மறந்திடு. கைப்பொருளை யிழப்பதேன்? பொருளிலார்க்கு இவ்வுலகில்லையென்பர்.

இரா:—பாமறையோதியும் மறைபொருளுணரா முனிவருமுளரென இதுவரையறியேன். வையம் நிலைப்பது வாய்மையிலேயே. வாய்மையிழந்து வாழ்வுமுகக்கவா? இன்பமும் பொருளும் அழிவுறும் ஒருநாள். அழியா இன்பம் அளிப்பது அறமே. வைதிக வேடம் பூண்டு வையகத்தை வஞ்சிப்பவர் வேதியராவரோ? யாவும் பொய்யேயாயின்,

நீரும் பொய்யே. நம்முரையும் பொய்யே. பொய் மொழியை எங்ஙனம் மெய்யெனக் கொள்வது? ஆரணநெறியகற்ற ஓர் காரணம் கற்பித்தீர். வேதநெறியற்றீர். வாதநெறியுற்றீர். யுக்திவாதத்தால் என் புத்தியைப் பேதிக்க முயல்வதால், என்ன சித்தியுமக்கு? மறைவழி கடந்தார்க்கு, இறைவனருள் எவ்வாறு கிட்டும்? உம்மையும் எம் மன்னவர் எங்ஙனம் அவைக்கண் அமர்த்தினரோ?

வசி:—சத்தியசீலா! உத்தமபுருஷா! நித்தியரூபா! செவிகொடுத்து என் சிறுமொழி[1] கேளாய். ஐங்குரவரில் அழிந்தொழியும் ஆக்கையை யாக்கியவர் தாய்தந்தையர். அறியா அறிவளித்து, அழியாப்பதம் அளிப்பவர் ஆசிரியர். அன்று, பற்பல விஞ்சைகள் எம்பால் பெற்றதுப் உண்மையேல், இன்றும், என் மொழிப்படி நடப்பாய்.

இரா:—மும்மையு முணர்ந்த முனிபுங்கவ!

“ஏற்றி மனத்தெழில் ஞான விளக்கை யிருளனைத்தும்
மாற்றினவர்க் கொருகைம்மாறு மாயனுங் காணகில்லான்
போற்றி யுகப்பதும் புந்தியிற் கொள்வதும் பொங்குபுகழ்ச்
சாற்றி வளர்ப்பதுஞ் சற்றல்லவோ முன்னம் பெற்றதற்கே.”

—வேதாந்த தேசிகன்.

உம்மையன்றித் தெய்வமொன்றில்லை யெமக்கு. நம் பேரருளால் எம் குலத்தினர் அழியாப் பெரும்புகழ் பெற்றனர். இதமொழிபேற்க அநாதினமும் காத்துளேன்.

வசி:—தீனசரணிய! ஞான பரிபூரண! தினகர குலகமல திவாகர! மரணமே நேரினும், சரணமென்றடைந்தாரைக் கருணையொடு காத்திடல், உன் புகழ்குலத்தியல்பு. நின் முன்னவரில் ஒருவரும் இந்நாள்வரை அந்நன்னெறி பிறழ்ந்திலர். கொடியவன வேடனது கடியபசி போக்கிடத் தன் உடலையும் எரியினில் உணவாயாக்கிய கபோதமுலாறு அறிவையன்றோ? நின்னுடன் பிறந்த உத்தம பரதன் முன்

(1) கேளாய்:—கேள்; கேளாதே.

காரணத்தானும் உன்னைச் சரணமடைந்துளன். உள்ளமும் உயிரும் உருகினன். அளவற்ற அன்பால், அடியற்ற மரமெனா அடியினில் வீழ்ந்தனன். நின்னையே நினைந்து நைந்திடும், அவன் நிலைபெற நினைவாய். எனதாணையால் நகரேகுவாய். நானிலமாளுவாய்.

சும:—கோமகனே! காவலனே! மாமுனி மொழிந்தபடி மாநக ரெழுந்தருள். குலமெலாம் நலமடையும். நானில முய்யும். நாற்றிசையும் உன்நல்லிசை பரவும்.

இரா:—சுமந்திரரே! சோதனையேன்? [1] தேன்தரு மலருளான் [2] சிறுவ! அன்னையும் பிதாவும் முன்னறிதெய்வம். அன்னவர் ஆணை முந்தியது. அன்றியும், செய்வனென்று ஏற்ற பின்னர், அவ்வுரை மறுப்பதும் தகவோ? தாய் விரும்பியதும் தந்தை யேவியதும் எதுவாயினும், அதனை மேற்கொளாத புலையனினும் நாயெனத் திரிவதே நலம். என் மறுத்துரை பொறுத்தருள்வீர்.

[தருப்பைப் புற்களுடன் பரதன் பிரவேசம். சத்துருக்கனும் பின் வருகின்றனன்.]

பரத:—வள்ளலே! வளநகர் வாராயோ? துணையாளனாகாயோ? அருள்மாரி பொழியாயோ? (இராமன் மௌனம்) கூவியழைத்தும் பாவிமுகம் பாராயோ? ஏழைதுயர் தீராயோ? ஆண்டருளும் அண்ணலே! மீண்டும் உன்னையே வேண்டுவன். நீ கைவிடில் நான் உயிர் விடுவேன். கருணையங் கடலே! கதறுகின்றேன். காத்தருளத் திருவுளமில்லையோ? (இராமன் மௌனம்) இன்னுமா மௌனம்? (சற்று யோசித்து) ஆ! [3] சிலையிருப்பதால் சித்தமிரங்கிலன். சிலையாளன் எனையாளான். இனி என்னுகில் என்னெனக்கு? கருமுகிலே! நின் அருள் சுரந்து பொழியும்வரை, இப் பன்னசாலையின் வாயிலிற் கிடப்பேன்.

[தருப்பைகளைப் பரப்பிக் கைகளைக் கூப்பிப் படியினில் கிடக்கின்றான்.]

---

(1) பங்கைய மலரோன் (பிரமன்) புத்திரன்.
(2) நாராயணனாகிய தான் படைத்த பிரமன் புதல்வனாதலால் சிறுவன் என்றான் இராமன்.
(3) சிலை:—கல்; வில். (அரக்கரையழிக்க வில்லேந்தியதால் இரக்கமிலன்.)

இரா:—புகழோங்கப்பிறந்த புண்ணிய! இக்கடுவிரதம் அடுக்காதுனக்கு. கடன்தீர்க்காக் கடையனோ யான்? என்னுள்ம் புண்ணாக, இன்னும், வருத்துவையோ? மண்மயக்கம் தேறிய நீ, உள்மயக்கம் தீர்ந்திலையே!

"பிறந்தோருறுவது பெருகியதுன்பம்
பிறவாருறுவது பெரும்பேரின்பம்
பற்றின்வருவது முன்னது பின்ன
தற்றோருறுவதறிக." — மணிமேகலை.

நீ மனம் வைத்தாலன்றி, மானிலம் உய்யுமாறில்லையே.

பரத:—(படியினிற் கிடந்தபடியே வேதியரை விளித்து) வேதியர்ஏறே! ஏதிலேன்! என் செய்வேன்? துயராழிக் கரையேறக் கைகொடுத்துக் காவீரோ?

வசி:—குலமணியே! தலைமகன் [1] நிலையெண்ணி நலியவேண்டாவென்று, அன்றே உணர்த்தினேன்.

இரா:—கலைவலவா! அந்தணர் எந்த நாளும் உதவியருள்வர். வேதியரோதியும் உணர்ந்திலையோ? [2] வேதனை யொழி. எழுந்திரு.

பர:—(சிரத்தினிற் கரம்குவித்தெழுந்து) உயர்வற உயர்நலமுடையாய்! மயர்வற மதிநலமருளினை. நின்றநின் நிலையையானுணர்ந்தனன். என்றும் என் நிலையை நீ யறிந்தனை. பணிசெய்து வாழப் பெறவே, நின் பின்னவனாய்ப் பிறந்துளேன். பேரருள்பெற யான் எத்துணை வேண்டியும், நின் பொன்னடி அருளிலதாயது. திருவருள் அடைய, உனது மரவடிகள் இரண்டினையும் வேண்டினேன். அருள் புரிவையேல், இருவருரையும் பொய்க்காது மெய்க்கும்.

இரா:—தந்தேன். பாதுகை தந்தேன். பெற்றேகுவை.

[பாதுகையை அளிக்கிறான்.]

(1) நிலை—பாதுகை; நிலைமை.

(2) வேதனை—வருத்தத்தை; வேதமோதும் தேவனே.

பர:—(சிரத்தினில் தரித்து) பெற்றேன்! நிலைபெற்றேன்! திருவருள் பெற்றேன்! பணிசெயப் பெற்றேன்! ஒப்பரிய பொருளைப் பெற்றேன்! அடித்தலமலரை என்முடித்தலம் சூடினேன்.

“உடையநாதனே போற்றி நின்னலாற்
பற்றுமற்றெனக் காவதொன்றினி
யுடையனோபணி போற்றியும் பரார்
தம்பராபரா போற்றி யாரினுங்
கடையனாயினேன் போற்றி யென்பெருங்
கருணையாளனே போற்றி யென்னைநின்
னடியனாக்கினாய் போற்றி யாதியும்
அந்தமாயினாய் போற்றி யப்பனே.”

—திருவாசகம்.

இரா:—மறையவர்திலக! மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி, இக்குறைவிலான் சிரமதில் புனிதநீர் பெய்து, மஞ்சன மாட்டி மகுடம் சூட்டுவீர்.

பரத:—அண்ணா! என்ன? மஞ்சனமாட்டவா? மகுடம் சூட்டவா? உனக்கிலா மனைவாழ்க்கை எனக்கா? மரவுரியுடுத்து மான்தோல் விரித்துக் கனியிலை நுகர்ந்து, நந்தியம்பதியினில் நின் நல்வரவு நினைந்துய்ந்திடுவேன். நின் மரவடியே மகுடம் சூடும். மாநிலமாளும். நிலைதந்த தாரகனே! நிடமித்த நாயகனே! போஷகனே! போக்கியனே! ஏழிரண்டாண்டினில் நீ நெடுநகர்நண்ணிக் கோமுறை புரிகிலையெனில், வெந்தணல் மூழ்கியான் மாள்வது திண்ணம். அண்ணா! மன்னா! நின்னாணை! திருவாணை!

இரா:—குணமணியே! நீ வேண்டியவாறே மீண்டும் வந்து, உன் மனோரதம் ஈடேறச் செய்குவேன்.

வசி:—பரதா! பாபரகிதா! பரமபவித்திரா! மரவடியின் மாண்பினை மன்னுலகுக்குணர்த்தவே வந்துதித்தனை. மக்களே! துன்பமிகு துயரகல இத்துயானது சுடரடி தொழுதெழுமின்.

“அருவுருவா னவையனைத்து மறிவாரேனும்
அருங்கலைகள் கற்றுரைக்க வல்லாரேனும்
கருமவழி யடியாமற் காப்பாரேனும்
கனிமறையின் முற்பரியக் கருவாரேனும்

இருவினையி னொழுக்கத்தா லேவலோரா
திங்கேராஞ் சிறையிருந்த வினந்தீர்க்கும்
திருமகளார் பிரியாத தேவன் திண்ணந்
தேறுதார் திண்படியிலேறு தாரே."

—வேதாந்த தேசிகன்.

[எல்லோரும் பணிகிறார்கள்.]

களம் 7 முற்றிற்று.

## களம் 8

இடம்:— சித்திரகூட மலையில் ஒரு காடு.

பாத்திரங்கள்:— அன்னையர் மூவரும், மைந்தர் நால்வரும், மற்றுமுள நண்பரும் பிரவேசம்.

இரா:—(கைகேயியின் அடிவணங்கி) அன்பார்ந்த அன்னையே! [1] அவனிபாரமகற்றிய அருட்பெருந்தேவி! உமது பேருதவிக் கேற்றதொரு கைம்மாறு காணகில்லேன்.

கைகே:—மன்னுபுகழ் மைந்த! பெண்ணறம் ஓம்பியே பெரும்பழியேற்றேன். [2] பார்விளங்கப் பழிசெய்த பாவியையும் போற்றுவையோ?

இரா:—நம்புகழே ஏத்துவன். என்னை நீர் வாழ்த்துவீர்.

கைகே:—மறையவரும் இமையவரும் உன்னையே வாழ்த்துவர். சகமறிப மகனுமென்னை மனமிடியத் தாழ்த்துவன்.

இரா:—பரதா! இவ்வறக் கற்பினளை, அருட்பெருஞ் சோதியை, அரிவையர்க்கரசியை அன்புடன் ஆதரிப்பாய். அகமகிழ்விப்பாய்.

---

(1) தன் தலையில் தந்தைவைத்த பூபாரத்தை யகற்றினள்; அரக்கரை யழித்து அவனிபாரமகற்றக் காரணமாயினள்.

(2) இழைத்த பிழையை பாரோர் அறிவர்; பார் விளக்கமுறவே இழைத்த பிழை.

பர:—காரணாகார! கருணாகர! உற்றுணர உணர்வற்று உளறினேன்; பித்தனாய் இதுவரை பிதற்றினேன். இன்றென் சித்தம் தெளிந்தேன். குற்றமினி புரியேன். அன்னையே! மன்னித்தருள்.

[பணிகிறான்.]

இரா:—ஏத்தரும் பெருங்கீர்த்தியாய்! மெச்சினேன் நின் மாசற்ற மதிக்கு. சத்துருக்கா! இலக்குவன் என்னுடனுறைந்து உதவுவன். இப்புனிதனையண்மி அகமகிழ்வை.

சுமி:—மைந்தா! உய்ந்திடவேண்டிடில் உத்தமோபாயமிதுவே.

சத்:—நெடியோனே! இவ்வடிமைக்குற்றது உன் அடியார்க்கு அடிமையே. நின்தாள் தொழுவார் என் தலைமேலார்.

இரா:—பிறப்பினிற் கடையனேயாயினும், சிறப்பினில் நெடியனேயாயினை.

சுமி:—இராமானுச! வனமுறையும் ஓர்புதல்வனைப் பெறவேண்டி, நோற்ற நோன்பின் பயனாய் உன்னைப் பெற்றேன். திருமகள் தலைவனுக்கு அடிமையாக்கவே, அன்புடன் உன்னை வளர்த்தேன். அருந்தவப்பயனே! இப்பெருந்தகையே சிறந்ததொரு [1] தந்தையுனக்கு. தாயினும் உயரியவள் [2] இச்சானகிமணியே. மன்னவர் மைந்தனென நினையாது, எந்நாளும் எவ்விடமும் அடிமை பூண்டொழுகுவை. கண்மணி! கண்ணிமைபோல் இருவரையும் காத்திடு. மாநகர்க்கு இவர் வந்திடின், நீயும் உடன்வந்திடு. மண்ணுலகிற் சிறந்திடு.

இல:—அம்மணி! அர்த்தபரர் அல்லர், உத்தமியின் [3] புத்திரர். உத்தமர்க்கென்றும் மித்திரரே.

சுமி:—செல்வா! [4] கடலனைய கம்பீரன்வடிவழகிற் கண்வைத்திடின் அடிமைத்தனமிழப்பாய்.

---

(1) & (2) நிருபாதிக பந்துக்கள்.

(3) சுமித்திரையின் மைந்தர் இருவரும்.

(4) அழகனது பேரழகில் மூழ்கினால், தன்னைமறந்து தன் பணியையும் இழக்க நேரும்.

இல:—அன்னையே! வள்ளலின் குணங்களே வலித்தெனையிழுத்தன. ஆணைப்படி அடிமையே யாவேன்.

கோச:—தனையா! நினையாய்! தீனையே ஆயினேன்.

இரா:—தாயே! துயரமேன்? மைந்தரிருவர் அருகிருந்து உம்மை என்றும் மகிழ்விப்பர்.

கோச:—உண்மை. இவ்விருவரும் எனக்கினியரே. உற்ற நற்றுணைவரே. அப்பனே! எப்பிறப்பிலும் உன்னையே மகனாகப்பெறப் பெறுவேன். அருமை மருகி சானகி! பதியே கதியெனவந்த பரமகல்யாணி! நன்மண நாளில் உன் தந்தை யுணர்த்திய குணமொழி மறவாய். கணவனைக் கணமும் பிரியாய். துணைவனைச் சிறிதும் இகழாய். மாமியை நினையாய்.

சான:—மாமி! தலைவரை அவர் நிழலென அநுதினமும் அநுசரிப்பேன். உடனிருந்துபசரிப்பேன். [1] அரிய தருமம் ஆசரிப்பேன்.

குக:—நாயகமணியே! இந்த நாய்க்கெந்த வழி?

இரா:—யாதினுமினிய நண்ப! நீயும் பரதனும் ஒன்றேயெனக்கு.

குகன்:—பரதாழ்வாருவ என்னுலாவாது. எளையபெருமானும் நானும் ஒன்னுப் போதும்.

இரா:—ஆருயிர்த்தோழா! நின்துணையின்றித் தாய்நகர் அநுபருறும். பரதனும் பரிதவிப்பன். என் வேண்டுகோளுக் கிணங்க வேண்டுவன்.

குகன்:—வேண்டணுமா? நாயெ வான்னு வருது. போன்னுப் போவுது. போட்ட இடமே இருக்குது. அந்தக் கடையன்போலே இந்தக்காடன் நடக்கத் தடையேயில்லே.

வசி:—குகப்பெருமானே! உடையவனுவப்பே அடிமையினுவப்பென உணர்ந்தனை. உலகினில் உனக்கிணை யொருவருமில்லை.

---

(1) சரணமென்றாலன்றிக் காவார் இறைவர். பாவமே புரியும் பாவியரையும் காப்பவள் விலக்குவதறியா இலக்குமி.

குகன்:—பாததூளிபட்டுச்சே! தீப்பட்ட தூசுபோலெ, பாவமெல்லாம் எரிஞ்சுபோச்சு.

பரத:—ஞானகிரமணா! நிரந்தரமும் உன் பாதபங்கயம் யான் நினைக்கவே நீ நினைக்கவேண்டுவன்.

"நின்னருளாங் கதியன்றி மற்றொன்றில்லேன்
நெடுங்காலம் பிழைசெய்த நிலை கழிந்தேன்
உன்னருளுக் கினிதான நிலை யுகந்தேன்
உன்சரணே சரணென்னுந் துணிவு பூண்டேன்
மன்னிருளாய் நின்றநிலை யெமக்குத் தீர்த்து
வானவர்தம் வாழ்ச்சிதர வரித்தே னுன்னை
இன்னருளாலினி யெமக்கோர் பரமேற்றாமல்
என் திருமா லடைக்கலங்கொள் ளென்னை நீயே."

—வேதாந்த தேசிகன்.

இரா:—இருவரும் ஒருவரை யொருவர் என்றும் மறவோம். அன்னையரே! அந்தணரே! அமைச்சரே! அன்பரே! அருளொடு விடையுமளிப்பீர்.

வசி:—வாழி! அறம்வளர வாழி! மறம்தளர வாழி! சிறந்துயர வாழி! நிரந்தரமும் வாழி!

[இராமனுடன் சீதையும் இலக்குவனும் ஒருபக்கம் செல்ல, மற்றவர் மற்றொருபக்கம் செல்கின்றனர்.]

களம். 8 முற்றிற்று.

## களம் 9

இடம்:—நந்திக்கிராமத்தில் ஒரு கோலுமண்டபம்.

பாத்திரங்கள்:—பரதன் சத்துருக்கன் வசிட்டர் சுமந்திரர் நகரவாசிகள்.

[பாதுகையை ஒரு பீடத்தில் அமர்த்தி துளபமாலை சூட்டி, வேதமோதி, தீபம் தந்து மஞ்சனமாட்டுகின்றனர். பூசை நடக்கின்றது.]

பர:—என்னபிழை யிழைத்தேன்! பாதுகையைப் பிரித்தேனே! மலர் மகள் கைவருடக் கன்றிச்சிவந்திடும், அவன் கமல

மலரடிகள் ஆங்கென்படுமோ? மறையவர் திருவே! மறுபடியும் அவன் திருவடியில் இம்மரவடியைச் சேர்த்திடவா?

வசி:—[1] எண்ணுதற்கரிய புண்ணியசரித! கலையெலாம் கற்று நீ [2] கல்வியிலாதவனுயினை. அடியார் இடர்களையும் அந்நெடியவன் இணையடிக்கு, மற்ருேர் அடிநிலையும் வேண்டுமோ?

பர:—அமுதனது நளினமலரடியின் மதுரமது இதுவரையருந்தியுகந்தது இம்மரவடி. இதன் இன்பத்திற் கிடையூறும் இழைத்தேனே!

வசி:—மாசிலாமணியே! தானுண்ட தேனை நீயுண்ண எண்ணியது.

வாம:—மறைவல்லீர்! யாவரும் விரும்பியது ஆயகளுட்சியன்ருே?

வசி:—கோரியபயனினும் கோடிமடங்கு அதிகமடைந்தனர் எவரும். அடியவர் பூசையால்அகமகிழ்வன் அவ்வாண்டகை.

வாம:—வாழ்வினில் உடனிருந்துகந்த மரவடி, தாழ்வினில் அவன் தாள்அகன்றதும்அழகோ? திருமகள் செய்வினை சிறிதுங் கருதாது, இரு நிலமாள இசைந்தது சரியோ?

வசி:—உடையவனுவப்பே அடிமையினுவப்பு.

வாம:—தலைவனையகலகிலாச் சனகன் திருமகள் [3] புன்சொற் புகன்றவன் பின்செல நினைந்தனளே!

வசி:—ஆம். அடிமைத்திறத்தினில், அத்திருமகளையும் வென்றதிவ்வடித்தலம். வருந்தியழைத்தும் வாராத அப்பாதாரவிந்தம் அருளிலதாயதெனக் கருதி, அவனிருபதமகன்று உறுபதம் உங்கட்களிக்கவே, வந்திவணமர்ந்தது.

வாம:—அடிமையின் ஆட்சியை அவனிமாதேற்குமோ?

வசி:—தலைவன் ஏவலைத் தலைமேற்ருங்குவள் இந்நிலமகள். சராசர மனைத்தையும் நற்பாலுக் குய்ப்பவன் அப்பராபரன். தன்னையே வேண்டி, மற்றெதுவும் வேண்டாதானைத்,

---

(1) எண்ணுதற்கு—நினைத்தற்கு; எண் நுதற்கு- பிரமனுக்கு.
(2) கல்வி இலாதவன்; கல்வியில் ஆதவன்.
(3) நகரிருக்கவேண்டிய இராமனை வற்புறுத்திப் புன்சொல் புகன்றனள் சானகி; புன்சொல் புகன்ற இராவணனையும் குறிக்கும்.

தான் வேண்டி வான்வேண்ட வைப்பன் அவன். பணி செய்த பாதுகையைப் பாராளவைத்ததுவும் பெரிதோ?

வாம:—மண்டலம் ஆண்டிடல்; [1] பெண்டிருக்கேற்றதோ?

வசி.—உத்தமனுகந்தபடி உலகாள உற்றதும், இவ்வுத்தமிக் கேற்றதொரு பணியே.

பரத:—பரமகுருவே! இம்மரவடியின் மாண்பினைப் பரிவுடனெமக்குணர்த்துவீர்.

வசி:—திருவினுக்கும் திருவாகிய செல்வனவன். ஆக்கமனைத்தையும் அகற்றிய அச்செல்வனுக்கும் அகற்றகில்லாச் சிறப்பு வாய்ந்ததிது. அண்டம்தாங்கும் ஆண்டவனையும் தாங்குவது அவன் அடியிணை. அத்திருவடித் தாமரையும்தாங்கியது இம்மரவடியெனில், தாங்கும் திறம் வாய்ந்தது, இதனினு முளதோ? இப்பொருளுக்கு, எப்பொருளும் ஒப்பில்லை. இருநிலத்தை ஓரடியாலடக்கி, மாவலியின் மதமடக்கியது இம்மரவடியே; கோதமமுனியின் மாதினை, அன்று சிலையுருபோக்கிச் சுயவுருவாக்கிப், பின்னும், கோதிலளாக்கியது இப்பாதுகையே. அன்றியும், கற்ற கலையால் உங்கட் குற்ற கவலையும் போக்கியது. ஆனது பற்றியே, வான் பணயமாய் இதைவைத்துப் போயினன். இவ்வடிநிலையை வழிபடில், அல்லலெல்லாமகலும்.

பரத:—முனிபுங்கவ! மதிமயக்கற்றேன். கதிபெறக் கற்றேன். துதிபெறவுற்றீர். மாமணிப் பாதுகையே! நின் திருவுறும் ஆட்சியால், மநுநெறி நிலைத்துநிற்கக், கவரியின் காற்றையேந்தித் தரளவெண் கவிகையோங்கத், தரணியைத் தாங்கியருள்.

[பாதுகைக்கு முடி சூட்டுகின்றனர். அனைவரும் போற்றிப் பணிகின்றனர்]

அங்கம் 2 முற்றிற்று.

---

(1) 'பாதுகா'—இச்சொல் ஸ்திரீலிங்கமாதலின் பெண்ணெனச் சொல்லப்பட்டது.

# அங்கம் 3

## களம் 1

இடம்:—நந்திக்கிராமத்தில் ஒரு யாக வேதிகை.

பாத்திரங்கள்:—பரதனும் சத்துருக்கனும்.

பர:—துணைவ! [1] திருமந்திரத்திற் பிறந்து திருவொடு மருவிய திருமகன், அரணியமதனில் [2] திருவற்றலைகின்றனன். இருவரும் இளைஞனுடன் இனிதுவர இயற்றுமிவ்வேள்வி, இன்று நிறைவேற இறைவன் அருள் வேண்டுவம்.

"ஆக்கமுமழிவுமின்றி யகண்டமா யமலமாகி
வாக்கொடு மனத்துக்கெட்டா வள்ளலே யறத்தின் வாழ்வே
தீர்க்கவுந் தீயோர் தம்மைச் செய்வினை நலத்திேனாரைக்
காக்கவுமன்றோ கடவுளவ்வுருவமம்மா."

—பாகவதம்.

இடையூறிதற்கிழைத்திட இரவினில் நிசிசரர் விரைந்திடில், வரிசிலை வளைத்து, அவர் சரமழை விலக்குவம்.

[ஆஞ்சனேயன் சஞ்சீவிகிரி யேந்தி அந்தரத்தேகுகின்றனன்.]

சத்:—அண்ணா! மந்தர மலையென அந்தரத்தெவனோ விரைந்தெழுகின்றனன்.

பர:—அரக்கனேயவன். என் கணைக்கவனை இலக்காக்குவேன்.

[கணையொன்றேவ, அடியுண்ட அநுமான் படியினில் வீழ்கின்றனன்.]

அநு:—(சினங் கொண்டு விரைந்தெழுந்து) பாதகமிழைத்த பதரே! மதங்கொண்ட நின் மார்பகம் இரண்டுபடப், பிளந்திடுவன் என் கரங்கொண்டு. (பரதனையணுகி இராமனென எண்ணிக் கரங்குவித்து) இராமா! பரந்தாமா!

பர:—ஐயனே! அவரது திருநாமம் உரைசெயும் நீவிர் யாவர்?

---

(1) அரண்மனையில்; அஷ்டாக்ஷரத்தில்.

(2) திருவற்று—செல்வமிழந்து; சீதையைப்பிரிந்து.

அநு:—மூவரும் ஒருருவாயுதித்த தாசரதி தாசன் யான். என்னை ஆஞ்சநேயனென்பார். அஞ்சாநெஞ்சு படைத்து, என் அஞ்சன் வண்ணனுக்கு இன்னலிழைத்த நீ யாவன்? உண்மையுரைப்பாய்: இல்லையேல், இறைப்பொழுதினில் உயிரினை யிழப்பாய்.

சத்:—ஆறுவது சினம். பொறையாளன் பேரடிமையாயின், பொறுத்தருள். இறைவனது மரவடியின் அடிபணியும் அடியவரிவர். திருவருள்மறவாத நினைவினால், இன்னுமிறவாத இனியரிவர். அப்பெருந்தகையின் நல்வருகை நினைந்து, அதனாலுய்ந்திடும் உத்தம பரதர் இவர்.

அநு:—அப்புகழ்பெறு பரதன் நீயேயோ? நின் நயவுரை நம்பி, என் நாயகன் உன்னையும் இனியனென, இன்னும், நினைந்துளன். இழிஞன் இராவணனுக்கு உறுதுணையாயுதவிய நின்னிதயம் அறிந்தேன்.

பரத:—அறியாதிழைத்த பிழையிது.

அநு:—(அரக்கரின் மாயையென எண்ணி) அறிந்தே புரிந்தவினையிது. அறிவேன் அரக்கரின் அறிவரிய மாயை. அடியவர் வடிவமெடுத்து இழைத்த கைதவத்திற்குக் காலநேமியை யான் காலனுலகுய்த்தனன். அப்பாவி போனவழி, இன்னும் வேலியிடப்பட்டிலது. என்னையும் வஞ்சிக்க, நெஞ்சினில் நினைந்தனையா? நெடியமால் வடிவமெடுத்தனையா? இலக்குவனுருவம் அடைந்தனனிவனும். இருவரையும் போக்கி, இறைவன் பகை போக்குவேன். காக்கவும் வல்லீரேல் காட்டுவீர் கைத்திறம்.

[கரத்தை யோங்க]

சத்:—வானரவீரரே! விண்மாரியெனவே கண்மாரி பொழியும், இவர் உண்மை நிலை காணவல்லீரோ? இப்புனிதரை நொந்திடில், அப்புனிதரும் நோவர்.

அநு:—குறிவைத்தடித்த குறிப்புதான் என்னோ?

பர:—திருமகளுடன் இறையவன் இனிதுவந்து இன்புறவேண்டி, வேதியர் விதிப்படி வேள்வியொன்றியற்றினேன். இடை

யூறிழைக்கவரும் அரக்கனென்றெண்ணி, என் கணைக்கும்மை இலக்காக்கினேன். பொலிவுறும் அவ்வெரிதனால் காணுவீர். தெளிவுறுவீர்.

அநு:—ஐயம் தீர்ந்தனன். மெய்யடிமை யுடையாய்! ஐயன் மொழி மெய்யே. பரமனடி பணிவார், பிழை சிறிதும் புரியார். அம்புவியில் உன்போல் தம்பியுமில்லை; அன்பனுமில்லை; அடிமையுமில்லை. [1] வானரன் அறைந்த வன்மொழி மறந்திடு. இன்னருள் புரிந்திடு.

பரத:—[2] வானரன் புரிந்தது வானிற் சிறந்தது. கருமுகில் வருநாள் குறுகியதன்றோ?[3] அரணியன் உறையிடமெதுவோ?

அநு:—அரக்கர் இடர் பொறுக்காது அடைக்கலமடைந்த அருந்தவர்கட்கு அபயமளித்தனர். அவனிபாரம் அகற்றிட அகத்தியரளித்த அருஞ்சிலை பெற்று, அவர் பஞ்சவடியுற்றனர். ஆங்கு அழகனைக் காணவும், காமுற்ற சூர்ப்பனகை அணுகிவந்தடையவே, அநுசன் அவ்வரக்கியின் அங்கங்களறுத்து அவளையும் துரத்தினன். அஃதறிந்து, அமராடநாடிய கரதூஷணதியரைக், காகுத்தர் ஒருவரே கடுஞ்சிலை வளைத்துக் கடிதினில் வீழ்த்தினர். பரிபவம் அடைந்த கொடியவள் விரைவினில் இலங்கையடைந்து, இராவணனடி பணிந்து குறைபல புகன்று முறையிடவே, மாதர் மயக்குற்ற பாவியும் காமியாய், [4]மாயமானொடு [5] மாயாமானை யணுகினன். [6] அம்மானையும் அநுசனையும் வஞ்சனையிற் பிரித்து, அஞ்சனவிழியளை அபகரித்தேகினன்.

பர:—அந்தோ! திருவற்ற திருமால் தனிநிலையென்றோ? இன்னுயிர் துறவாது, இன்னுமிருந்தனரோ?

---

(1) & (2) வால்நரன்; வான்நரன்.

(3) ரக்ஷகன்; அரணியமுறைபவன்

(4) மாயமமைந்தமான்; மாய்வதற்கு மானொடு.

(5) மாயாமான்—சீதை.

(6) அம்மான்—இராமன்.

அநு:—[1] இன்னுயிர் இங்கிருக்க, ஆங்கெவ்வுயிர் துறப்பர் அவர்? தேவியை யெங்கும் தேடியலைந்து, வானரருறையும் மாமலை வந்தனர். [2] கதிரவன் மைந்தனைக் கருணையால் நோக்கினர். பிறன்மனை நயக்கும் பிழைபொறாப் புனிதர், வாலியின் வலியை யாங்கே வாங்கி, ஏங்கியவானரர்க்கு அவர் [3] மனையுமளித்து, மௌலியும் கவித்தனர். பிறகு, திருமகள் சிறையிடம் இலங்கையென்றறிந்து, வானரவீரருடன் ஆழ்கடல் கடந்து, அத்தீவினை யடைந்தனர். பகைவரையும் உறவுகொளக் கருதும் உதாரர், சரணமடைந்திடில் அபயமளிப்பதாய்ப், பரதேவியைப் பிரித்தபாவிக்கும் அருளினன். நாடிய வீடணரை அவர் கூடியதறிந்தும், [4] காலவசத்தனாய் அத்தசவதனன் இசையாதொழியவே, போரினைவிளைத்துப் பேரிலங்கை யெழிலழித்துப், போர் அரக்கர் அனைவரையும் கொன்றுவென்று நின்றனர். பின்னர், அப்பாவியின் கான்முளை மாயமாய் மறைந்து, [5] மாயப்போர்விளைத்து, இளையபெருமானை வீழ்த்தினன்.

பரத:—அந்தோ! அவ்வீரனும் இறந்தனனோ?

அநு:—இறந்திலன். இறவாதிருந்திலன். ஆதவன் உதயமாயின், அவன் ஆவியும் மாயும். அதற்குள் அவனை உயிர்ப்பிக்க வேண்டி, அச்சஞ்சீவிகிரியை அடியொடு பெயர்த்து அந்தரத்தேகாகின்றேன். இடையினில் அதற்கு இடையூறிழைத்தனை.

பர:—ஆய்ந்தநேயரே! கணமதில் உம்மை இலங்கை யடைவிப்பேன். என் கணைவலியின் துணைகொண்டேகுவீர்.

அநு:—வாலியைக்கொன்ற வல்லவன் அருளிருக்க, என் வலிக்கென்னகுறை? வாயுவேகமாய் ஏகவல்லேன். விடையளிப்பாய்.

---

(1) உயிரனைய பரதன்.
(2) சுக்கிரீவன்.
(3) வீடு; மனைவி.
(4) கெட்டகாலம்; யமன்
(5) கபடப்போர்; மாய்வதற்குப் போர்புரிந்து.

பர:—இருவரையும் தந்து [1] எம்மையும் தருவீர்.

அநு:—அஞ்சற்க! தினகரன் உதயமாயினன்றே, உடலை விட்டுயிர கல நேரிடும். குணதிசை அவனெழாவண்ணம், அலைகடலில் அவனை என் பதம்வைத் தழுத்துவேன். ஆவிகவர அக்காலனே நேரில் வரினும், என் காலினால் அவனை யுதைத்தகற்றுவேன். அமுதமே வேண்டிடில், அம்பரம் தாவி அம்முழுமதியைப் பிழிந்திடுவேன். பாரகம் பிளந்து பாதளம் புகுந்து, ஆங்குள அமுதகலையமும் கொணர்வேன். என்னுயிர் நின்றிட இன்னுயிர் நீங்காது.

"காலநேமிகாலனே கணக்கிலாத கீர்த்தியாய்
ஞாலமேழுமுண்டு பண்டோர் பாலனாய பண்பனே
வேலைவேவ வில்வளைத்த வெல்சினத்த வீர நின்
பாலராய பத்தர் சித்தம் முத்தி செய்யும் மூர்த்தியே."
—திருமழிசைப்பிரான்.

சீராமா! ஜயராம! ஜய ஜய ராமா!

[கிரியுடன் விரைந்து செல்கின்றனர்.]

களம் 1 முற்றிற்று.

## களம் 2

இடம்:—நந்தியம்பதியில் ஒரு அரை.

பாத்திரங்கள்:—பரதனும் சத்துருக்கனும்.

பரத:—துணைவ! நீடிய பதினான்காண்டுகளும் இன்றோடு முடிந்தன. அருளாளன் வருநாள் என்நாளோ?

சத்:—அண்ணா! இன்று வாரானேல் நாளையே வருவன்.

பரத:—நாளை வருவதறியேன். வருமளவும் தரியேன். வானகம் தாவிய வாயுதனையன் அத்தீவினையடையுமுன் இளையவன் ஆவிநீத்தனனோ?

சத்:—காலனுக்கும் காலன் அக்காவலன். ஐயம் தீர்ந்து, ஆருதலடைவீர். வாய்மொழி காத்திட வையம் வந்தவன், மெய்யை நீக்கி நில்லான்.

(1) எங்களை; இம்மை மறுமைகளை

பரத:—பொய்யைப் போற்றி யானுமில்லேன். வரமொன்று தருவையோ ?

சத்:—வரமா ? உமக்கா ? அடிமைக்கும் தரமா ?

பரத:—தயை புரியாயோ ?

சத்:—கோரிய வரம்தான் என்னே ?

பரத:—அரசாள இசைவையோ ?

சத்:—ஏன் ?

பரத:—பாவி இப்புவியுள்ளவரை, அப்பரம பாவனன் பாராள வாரான். ஆதலின், உயிரொடு துயரமும் நீக்குவன்.

சத்:—நும்முயிர் நீங்கியபின்னர் என்னுயிர் நின்றிடில், அங்ஙனமே செய்வன்.

பரத:—இந்நாள்வரை யுதவிய நீ, இன்று கைவிடுவையோ ?

சத்:—எந்நாளும் உமதடியினை விடேன். மறுமையிலும் உடனிருந்துய்ய உமக்குமுன் செல்வேன். விடையளிப்பீர்.

பரத:—வாய்மையகற்றி வையம் வாழவா ?

சத்:—என்னே என் வாழ்வு !

“ கானாளநிலமகளைக் கைவிட்டுப் போவானைக் காத்துப்பின்பு
போனானுமொருதம்பி போனவர்கள் வருமவதி போயிற்றென்று
வானாளவுயிர்விட வென்றமைவானு மொருதம்பியயலேநாணு
தியானுமிவ்வரசாள்வெனென்னேயிவ்வரசாட்சி யினிதேயம்மா.”

—கம்பர்.

புதல்வர் நால்வர். இருவர் அகன்றனர். ஒருவர் இறந்திடுவர். மூவரையுமிழந்து மானிலமுமாளுவன் மற்றொருவன். அண்ணா ! நால்வரில் ஒருவர் போய் ஒருவர் உய்வரோ ? அன்னையரும் ஆருயிர் துறப்பரே ! புகழ்குலம் அழியுமே !

பரத:—குலப்புகழ் அழியவா? அழியாப் புகழுடைய அனலினில் மூழ்குவன்.

[போகயத்தனிக்கிறான்.]

சத்:—முன்னம் யான் முடிவன்.

[முந்தி விரைந்துபோகிறான். பரதனும் தொடருகிறான்.]

களம் 2 முற்றிற்று.

# களம் 3

இடம்:—நந்திக்கிராமத்தைச் சார்ந்ததோரு வனம்.

பாத்திரங்கள்:—பரதனும் சத்துருக்கனும்.

[சத்துருக்கன் தீ வளர்த்திக் கொண்டிருக்கிறான்.]

பர:—(இடிந்த மனதுடன் இராமனை நினைந்து)

"அன்னையினும் பெரிதினிய கருணையூட்டு
மாரமுதே யென்னுறவே யரசே யிந்த
மன்னுலகிலடியேனை யென்னே துன்பவலையி
லகப்பட வியற்றி மறைந்தாயந்தோ
பொன்னை மதித்திடுகின்றோர் மருங்கே சூழ்ந்து
போனகமும் பொய்யுறவும் பொருந்தலாற்றேன்
என்னையுளங் கொள்ளுதியோ கொள்கிலாயோ
வென் செய்வேனென் செய்வேனென் செய்வேனே."

—திருவருட்பா.

[தன்மயமாய் சோர்ந்து நிற்க, அன்னையரும் ஆசிரியரும் வந்து தேற்றியுங் கேளாது, இருவரும் திருமகளை முன்னிட்டு இறைவனைப் போற்றி எரிதணலை வலம் வர, அன்னையரும் பின்தொடர]

பர: } —
சத்: }

"உவகை யளிக்கும் பேரின்பவுருவே
யெல்லாம் உடையானே
திலகஞ் செறிவாணுதற்கரும்பே
தேனே கனிந்த செழுங்கனியே
தெவிட்டாதன்பர் உளத்துள்ளே
தித்தித் தெழுமோர் தெள்ளமுதே
மலகஞ் சுகத்தேற்கருளளித்த
வாழ்வே யென்கண்மணியே யென்
வருத்தந்தவிர்க்க வருங்குருவாம்
வடிவே ஞான மணிவிளக்கே
சலகந்தரம் போற் கருணை பொழி
தடங்கண் திருவே கண்ணமங்கைத்
தாயே சரணஞ் சரணமிது
தருணங் கருணை தருவாயே"

—திருவருட்பா.

அநு:—(அந்தரத்தினின்றும்) ஐயன் வந்தனன். ஆரியன் வந்தனன். ஆண்டவன்வந்தனன். தாசரதி வந்தனன். தசகண்ட கண்டகன் வந்தனன்

பர:—(விண்ணோக்கிய வண்ணமே) உண்மையிலவன் வந்தனனு!

அநு:—(முன்தோன்றி அனைவரையும் விலக்கி அனலையும் அவித்துக் கரியாக்கி) மூவரும் வந்தனர். உறுதிமொழி தவறாத உத்தமன் வந்தனன். அரக்கன் முடிபத்தையும் உதிர்த்தவன் வந்தனன், விரலாழி தந்தனன்.

[மோதிரம் தருகிறான்.]

பர:—(மோதிரத்தைக் கண்ணிலொற்றிக்கொண்டு அதைநோக்கி) செந்தணல் மூழ்கியாம் வெந்திடாவண்ணமே முந்தி நீ வந்தனையோ? (அநுமானை விளித்து) அஞ்சனைச் சிங்கமே! ஆண்டுகள் பதினான்கும் கழிந்தன. அண்ணலின் [2] எண்ணந் தான் என்னே?

அநு:—நின் [3] எண்ணம் தவறு.

பர.—தவறு? வள்ளலின் வரவை அநுதினமும் எண்ணிய என்னெண்ணம் தவறு? தவறுயின், தலையறப்புண்டும் சாவேன்; சத்தியம் காண்மின். சோதிக்க எண்ணினனோ? வாதிக்க வந்தனையோ?

அநு:—எண்ணிய நாழிகை நாற்பதும் இன்னும் கழிந்திட நின்றுளது.

பர:—தடையாய்து அதுவேயோ?

அநு:—பொருசமர்முடியவும், முடியினைச்சூடிய வீடணனளித்த விமானமேறி விரைந்து வருவழியில் தவத்துள பரத்துவர் அவர்க்கு விருந்தளிக்க விரும்பினர். ஆதலின், நாளை வந்து உங்களை மகிழ்விப்பர்.

பர:—அநுமானே' குணவானே! கனவானே!செம்மையால் [4] உயிர்

---

(1) உண்மையாக : உண்மையில்லாத.
(2) நினைவு.
(3) கணக்கு.
(4) என்னுயிர் : உயிராகிய இராமன்.

தந்தாய், செய்யும் செயலறியேன்! என் [1] மெய்யும் உன் வயமே. [இருவரும் தழுவிக்கொள்ளுகிருர்கள்.]

பர:—(ஆனந்த வாரிதியில் மூழ்கி) வந்தார்! வந்தார்! அருளாளர் ஆள வந்தார்! [2] அத்திகிரிப் பெருமாள் வந்தார். சத்திய விரதர் வந்தார். முத்திமழைபொழியு முகில்வண்ணர் வந்தார். இணையடிக் கீழ் வைத்தடிமைக் கொள்வார் வந்தார். [3] இளையவர்கட் கருளுடைய இறைவர் வந்தார். இனி பாரினுள்ள பாவமெல்லாம், தூறுகள் பாய்ந்திடும். பொறியில் வாழ் நரகமெல்லாம் புல்லெழுந் தொழியும். நலமுறுவோம். [4] நற்பதம் பெறுவோம். வள்ளலை யெதிர்கொள விரைவினிற் செல்லுவோம். வாரீர். பாரீர் பரமனை.

[எல்லோரும் போகிருர்கள்.]

3ம் களம் முற்றிற்று.



## களம் 4

இடம்:—அயோத்திமன்னன் அரண்மனைக்கடுத்த வீதி.

பாத்திரங்கள்—இராமனும் அநுசரும் அநுமனும் குகனும், வீடணனும், மறையவரும் அமைச்சரும், மற்றும் வானரவீரரும் நகரவாசிகளும் பிரவேசம்.

[அன்னையர் அரண்மனையினின்றும் வெளிவர அவர்களைக் கண்டதும் இராமன்விரைந்தோடி யடிபணிந்து, தேவி கைகேயியை நோக்கி.]

இரா:—தாயே! தயாநிலையே! தரணியில் உய்ந்தேன் உம் திருவருளால். உமது கருணையே காரணமாய்; ஐயன் மெய்யன்பும், நும்மைந்தன் பாமகிமையும், அருந்திறல் அநுமந்

(1) உடலும் : மெய்யனுகிய இராமனும்.
(2) ஆழியேந்தியபிரான் : யானைபோன்ற மலையாளன்.
(3) பரதனுக்கும், சுக்கிரீவனுக்கும், விபீஷணனுக்கும்-
(4) நல்லஸ்திதி : பரமபதம்.

தன் ஆற்றலும், புகலரிய குரக்கரசர் நட்பும், சௌமித்திரி பத்தியும், சீதையின் சத்தியமும், எனது மெய்வலியும், வேடுவர் தலைவன் ஈடிலா நேயமும், பரிவுடன் உம் மகனடிசூடிய கடைநனின் பெருமையும், மற்றும் அறிவரியயாவையும் அறியப் பெற்றேன். நும் பொற்கழல் போற்றினேன்.

[கைகேயி இராமனையும், கோசலை சானகியையும், சுமித்திரை இலக்குவனையும் தழுவியகமகிழ.]

பரத்:—அண்ணா! மன்னா! மண்ணாள எண்ணுவாய். எந்நாளும் ஆளுவாய்,

அநு:—என்னையும் ஆளுவாய். [1] என்னாளும் எண்ணியருள்.

இரா:—[2] எண்ணற்கரியாய்!

" எந்நன்றிகொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்றமகற்கு."

—திருக்குறள்.

மேதினியில் உன் போல் ஏது துணை? தூது போய் என் தேவியை எனக்களித்தனை. [3] என்னையுனக் களித்தனன்.

[அநுமனைத் தழுவுகிறார்.]

பரத:—யாவரையுங் காத்தருளிய மாருதியே! அடிமையும் உன்னடிமையே.

[அடிபணியும் பரதனையெடுத்துத் தழுவிக்கொள்கிறான்.]

இல:—" அஞ்சிலே யொன்று பெற்றான் அஞ்சிலே யொன்றைத்தாவி
அஞ்சிலே யொன்றாறாக ஆரியர்க்காக வேகி
அஞ்சிலேயொன்று பெற்ற வணங்கை கண்டயலாரூரில்
அஞ்சிலே யொன்று வைத்தான் அவனெம்மை யளித்துக்
காப்பான்."

—கம்பர்.

---

(1) என்னாளும்—என்நாளும்—இறைவனை நினையாத நாளெல்லாம் நாளல்லவாதலால் நன்னாளாக நினைவாய். என் ஆளும்—என் கைங்கர்யத்தையும் அங்கீகரிப்பாய்

(2) ஆஞ்சனேயன் சிரஞ்சீவி.

(3) என்னை யாது உனக்களித்தனன்? என்னையே உனக்களித்தனன்.

இரா:—புகழ்குலமழியா துதவிய துணைவ! வாளுள வேண்டினும் நீ யாளத்தருவன்.

குக:—காடாள வோணுன்னுக் கட்டாயம் தந்திடுவேன்.

அநு:—ரகுவீர! ரணதீர! மங்களகர! மஹாசூர! சாதுஜன சம் ரக்ஷக! சர்வலோக சரண்ய! சகலபாப நிவாரண!

"ஒன்றுண்டு செங்கண்மால் யானுரைப்பது—உன்னடியார்க்கு
என்செய்வனென்றே யிருத்தி நீ—நின்புகழில்
வைகுந்தம் சிந்தையிலும் மற்றினிதோ நீயவர்க்கு
வைகுந்த மென்றருளும் வான்."

—நம்மாழ்வார்.

இராமா! ஸ்ரீராமா! பரந்தாமா! பாவனநாமா! நின் ஈரெழுத்தும் ஒருபதமும் இனிதிருக்க, வேறு[1] பதமொன்றும் அறியேன்.

"நன்மையுஞ் செல்வமும் நாளும் நல்குமே
தின்மையும் பாவமுஞ் சிதைந்துதேயுமே
சன்மமுமரணமுமின்றித்தீருமே
இம்மையே யிராமவென்றெழுத்திரண்டினுல்."

—கம்பர்.

புண்ணிய! புழுவாய்ப் பிறக்கினும் உன்னடி என் மனத்தே வழுவாதிருக்க வரம்தர வேண்டுவன்

[அடிபணிகிருன்.]

இரா:—வாயுதனேயா! என்நினைவு உன்னைவிட் டணுவளவும் அகலாது.

பர:—குலகுருவே! மலர்மகளொடு நிலமகளையும் குலமுதலோடு சேர்த்திடுவீர். மணி முடி சூடி மாமணி மண்டபத்துள் மலராதனத்தமர்த்துவீர். இளைஞர் இருவரும் இறைவன் இருபுறமும் கவரிவீசிக் களிப்படைவர். உற்றபணி பெற்றிட யான் கொற்றவெண் குடைபிடிப்பேன்.

அநு:—பீதமலரின் மதுவருந்தி பேரின்பம் அடைந்திடுவேன்.

---

(1) சொல்; இடம்.

குக:—சாமியும் தேவியும் [1] சேந்து சேவெதந்தா, சாவில்லாமெ சேவெ பண்ணலாம்.

வசி:—குமார ! சுகுமார ! ஜனோபகார ! ஜானகீமனோகர ! தாழ்சடைகளைந்து நீண்முடிபுனைந்து, ஆயிரத்தாண்டுகள் அவனியையாண்டு அனைவரும் அரும் [2] பதம் அடைந்திட உகந்திடு.

இரா:—மறையவர் திருவே! மண்ணுளும் ஆக்கமெனக் கொண்டாளும் ஆக்குவிரேல், மறையாளர் ஆதரவை ஆதாரம் ஆக்குவீர். கேகயச் செல்வனையும் இளவரசன் ஆக்குவீர்.

வசி:—"சற்பத்துறங்கு மரங்காவுன் பாதந்தனை யடைந்த
நற்பத்தருக் கொரு நாசமுண்டோ நலமா மருத்தின்
வெற்பைக்கொணர்ந்த விறலனுமானுமவ் வீடணனுங்
கற்பத்தளவு மழியாதிருக்கவுங் கற்பித்தையே."

[திருவரங்கத்துமாலை.]

வசி:—ஜகதாதார ! பரமோதார ! மநுநெறிமுறைப்படியே [3] முடிப்பன். மக்களே! மகிழ்வுற வருவீர்.

[எல்லோரும் போகிறார்கள்.]

---

களம் 4 முற்றிற்று.

---

(1) சேர்க்கும் திருமகள் சேர்த்தியில் ஸேவை செய்வதே சேதனனுக்குப் புருஷார்த்தம்.

(2) பதம்:—திருவடி; பரமபதம்.

(3) பூர்த்திசெய்வேன்; முடிசூட்டுவேன்.

# களம் 5

இடம்:—அயோத்தியாபுரியில் பட்டாபிஷேகமண்டபம்.
பாத்திரங்கள்:—இராமனும் சீதையும் அநுசரும் அன்னையரும் ஆசிரியரும் அமைச்சரும் அநுமந்தனும் குகனும் மற்றும் நகரவாசிகளும் வானரவீரரும்.

*[இராமன் பீதாம்பரமுடுத்து மகரகுண்டலமணிகள் அணிந்து, நீண்முடிசூடி சானகியுடன் பொன்னணி மண்டபத்தில் புஷ்பகமாசனத்தில் வீற்றிருக்க, பரதன் வெண்கொற்றக் குடைபிடிக்க இலக்குவனும் சத்துருக்கனும் இருபுறமும் கவரிவீச அநுமந்தன் அடிதாங்க, மறையவர்வாழ்த்த மற்றவர்போற்ற, வானவர் மலர்மாரி பொழிய, பட்டாபிஷேக மகோத்ஸவம் நடைபெறுகிறது.*

அனைவரும்:—*வாழி! வாழி! ரகுராமன் வாழி! சீதாராமன் வாழி! நீடூழிவாழி!*

*" திருவாழி சங்கு திருவாழி வாழி சிறந்தகொண்ட*
*லுருவாழி யோகத்திருந்துயில் வாழி யுலகளந்த*
*மருவார் மதுமலர்த்தாள்வாழி வாழி வணங்குமன்பர்*
*பெருவாழ்வனைய பெருமாளரங்கப் பெருஞ்செல்வமே."*

*[திருவரங்கத்துமாலை.]*

**மங்களம்.**

*" கருமாமுகிலுருவா கனலுருவா புனலுருவா*
*பெருமாள்வரையுருவா பிறையுருவா நினைந்துருவா*
*திருமாமகளுருவுஞ் சிறுபுலியூர் ஜலசயனு*
*அருமாகடலமுதே யுனதடியேன் சரணமே"*

*[திருமங்கைமன்னன்.]*

களம் 5 முற்றிற்று

மங்களம்.

# பிழைதிருத்தம்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 6 | 9 | மெய்யன | மெய்யென. |
| 29 | 27 | றியம்பினள் அரசென்றாள் | றியம்பினன் அரசனென்றாள். |
| 41 | 28 | மாகமளே | மாமகளே. |
| 66 | 22 | எனாதற்றல் | எனதாற்றல். |
| 71 | 17 | நினைந்திலையோ | நனைந்திலையோ. |
| 85 | 24 | இண்டினையும் | இரண்டினையும். |
| 104 | 19 | திருமள் | திருமகள். |



